புகழேந்திப்புலவர்

இயற்றிய

# கோவலன் கதை

சித்திரப்படப் பதிப்பு

MADRAS

1914

மாதர் மஞ்சரி மலர் - 6.

புகழேந்திப்புலவர்

இயற்றிய

# கோவலன் கதை

சுத்தப் பதிப்பு

MADRAS:
PRINTED AT THE VAIJAYANTI PRESS, MOUNT ROAD

1914

# முகவுரை

பூவலர் சோலையொடு புனிதமா நதிகளும்
தேவா லயங்களும் திகழ்ந்து விளங்கும்
நாவலந் தீவில் நற்றமிழ் நாட்டிற்
பாவலர் தமக்குக் காவல ராகிக்
கோவலன் கதையிதைக் கோணு துரைத்த

## புகழேந்திப்புலவர் வரலாறு

இன்னதென ஒருவாறு சுருக்கி ஈண்டுக் கூறப்பெறுகிறது.

இவர் தொண்டை நாட்டில் உள்ள பொன்விளைந்த களத்தூரிலே பிறந்தவர். சமயோசிதமாகக் கவிபாடுவதில் மிகவும் சிறந்தவர். இவரது கவித்திறத்தைக் கேள்வியுற்ற பாண்டிய மன்னன் இவரைத் தனது சமஸ்தான வித்வானுக வைத்துக்கொண்டான். இந்த உத்தியோகத்தில் இவர் அமர்ந்திருக்கும்போது, சோழமன்னன் சமஸ்தான வித்வானுயிருந்த ஒட்டக்கூத்தர் என்னும் ஒரு புலவர் அச்சோழனுக்குப் பெண் பேசுவதற்காகப் பாண்டியன் சமஸ்தானத்திற்கு வந்தார். வந்தவர் தாம் வந்த காரியத்தைக் கூறத்தொடங்குமுன், பாண்டியனது க்ஷேமலாபங்களை விசாரித்துப் பிறகு தம் அரசனுகிய சோழனைச் சிறப்பித்துக் கவிகூற வெண்ணி,

வென்றி வளவன் விறல்வேந்தர் தம்பிரான்
என்றும் முதுகிற் கிடான்கவசம் - துன்றும்

என்றுபாடி அதற்குமேல் எவ்வாறு பாடலாமென்று யோசித்தார். கூத்தர் யோசனைசெய்து முடிப்பதற்குள், புகழேந்திப்புலவர்

வெறியார் தொடைகமழு மீனவர்கோன் கைவேல்
எறியான் புறங்கொடுக்கி னென்று

எனக் கூறிப் பாட்டை முடித்துவிட்டார். இதில் புகழேந்திப் புலவருடைய கவித்திறமும் நுட்பமதியும் எவ்வளவு தெளிவாக விளங்குகிறது! அவர் தம் கவிவன்மையால் பாட்டை முடித்தது ஒரு புறமிருக்க, முள்ளைக்கொண்டே முள்ளை யெடுப்பதுபோல, கூத்தர் சோழனை உயர்த்திக் கூற எடுத்த சொற்களைக்கொண்டே அவனைத் தாழ்த்தி தமது பாண்டிய மன்னனை உயர்த்திக் கூறிய சாமர்த்தியமே சாமர்த்தியம்!

மேற்கூறிய வெண்பாவில் கூத்தர் பாடிய முதலிரண்டடியின் கருத்தென்னவெனில், 'பகையரசர்களை வெல்லுவதில் வல்லனாகிய வளவன், அதாவது பாண்டியன், வல்லமையுள்ள அரசர்கள் பலர்க்குத் தலைவனாவான். அவன் தன் மார்பிற் கவசம் அணிந்து கொள்வானேயொழிய முதுகில் ஒருநாளும் கவசம் அணிந்து கொள்ள மாட்டான்' என்பதே. இதற்குக் காரணம் இன்னதென மற்ற இரண்டடிகளிற் கூறக் கூத்தர் கருதியிருந்தார் போலிருக்கிறது. அவர் கூறக் கருதிய காரணமாவது, 'போரில் பாண்டியன் முதுகுகாட்டி ஓடமாட்டான். எதிர்த்துநின்று யுத்தம் புரிவான்' என்பதே.

புகழேந்திப்புலவர், பாண்டியன் முதுகில் கவசமணியாததற்குக் காரணமாகக் கற்பித்துக்கூறிய பின் இரண்டடியின் கருத்து என்னவெனில், 'வாசனையோடுகூடிய மலர்மாலைகளை யணிந்தவனும் மீனக் கொடியை உயர்த்தவனுமாகிய சோழன், அவன் (பாண்டியன்) யுத்தத்தில் தோற்றுப் புறங்காட்டி ஓடினால், அவனது முதுகில் அம்பெய்ய மாட்டானாதலால்' என்பதே. இதில் புகழேந்திப் புலவரது சாதுரியம் நன்றாக விளங்குவது காண்க.

இப்படியே இவர் பலபல சந்தர்ப்பங்களில், தமது சாதுரியம் விளங்கப் பாடிய கவிகள் அநேகம். அவைகளெல்லாம் மாதர்மஞ்சரியின் முதன் மலராகிய, ஏணியேற்றம் என்னும் நூலில் விரிவாகக் கூறப்பெற்றிருப்பதால், உதாரணமாக முன்காட்டிய ஒரு கவிமட்டுமே இங்கு கூறப்பெற்றது. இது நிற்க.

அங்ஙனம், புகழேந்தியால் அவமானமுற்ற கூத்தர் அதுமுதல் அவர்மீது பொறாமைகொண்டு பகைமை பாராட்டி வந்தார்.

அப்பால், பாண்டியன் தன் புத்திரியைச் சோழனுக்கு விவாகம் செய்து கொடுத்தான். அப்பொழுது அவன் தன் மகளுக்குக் கொடுத்த சீதனப்பொருள்களோடு, புகழேந்திப் புலவரையும் ஒன்றாகச், சோழன் அரண்மனைக்கு அனுப்பிவிட்டான். தன் அதிகாரம் செல்லும் இடத்தில் புகழேந்திப்புலவர் வந்து சிக்கிக்கொள்ளவே, ஒட்டக்கூத்தர் அவர்மீதுகொண்டிருந்த பகைமையால், அவரைச் சிறையிலடைத்துவிட்டனர்.

சிறையிலடைபட்ட புகழேந்திப்புலவர், தம் விதியை நினைந்து சிறையிலிருந்து மீளுங்காலம் வரும்வரையில் பொறுமையோடிருந்தார். அவர் இருந்த சிறைச்சாலையினருகாக, ஸ்திரீ

கள் பலர் தண்ணீரெடுப்பதற்காகப் போவதுண்டு. புலவர் அவர்களைத் தம் சிறைச்சாலையின் ஜன்னல் அருகாக அழைத்து, பாரதம் முதலிய நூல்களிலுள்ள பலகதைகளை, அவர்கள் காதுக்கினிமையாக மிகவும் எளியநடையிற் பாடினர். அவைகளே நங்கைப் பாட்டு என வழங்கப்படுகின்றன. இந்தப் புலந்தரன் தூது என்னும் நூலும் அவைகளுள் ஒன்றாகும். அங்ஙனம் அவர் பாடிய கதைகளைக் கேட்கும் மாதர்கள், அவர்க்குப் பலகார பக்ஷணங்களும், அரிசி, பருப்பு முதலிய போஜன சாமான்களும் கொண்டுவந்து கொடுப்பார்கள். இங்ஙனம் இவர்க்குக் கிடைத்தவைகளைக் கொண்டு இவர் போஜனம் நடந்தேறியது. புலவர் தாம் உண்டு மீந்தவைகளைச் சிறைகாவலர்களுக்குக் கொடுத்து அவர்கள் அனுதாபத்தையும் பெற்றிருந்தார்.

இவ்வாறு சிலகாலம் சென்றது. அப்பால் ஒரு நாள், சோழன் மனைவி, ஊடல் கொண்டு அரசன் தனது பள்ளியறைக்கு வருங்கால், கதவைத் தாளிட்டு அவனை உள்வரவொட்டாமல் தடுத்தாள். அரசன் என்ன வேண்டியும் அரசி கதவைத் திறவாததால், அவன் தனது குருவும் சமஸ்தான வித்வானுமான ஒட்டக்கூத்தரை அழைத்து, அரசி கதவைத்திறக்கும்படி செய்ய வேண்டினன். அவர் அதற்கிசைந்து "சூரியனைக் கண்ட மாத்திரத்தில் தாமரை தானாக மலர்வது இயல்பல்லவா? அங்ஙனமே, சோழனாகிய சூரியன் உனது வாசலில் வந்தால், தாமரையாகிய உனது கை, தானே தாளைத் திறவாதோ?" என்ற கருத்தையமைத்து ஒரு கவி பாடினர். இதில் தான் கதவைத் திறக்கவேண்டியது கட்டாயம் என்ற பொருள் தொனித்ததால் அரசி கோபம் மிகுந்து, 'ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்' என்று கூறி மற்றொரு தாழ்ப்பாளையும் போட்டாள்.

அதன்மேல் அரசன், சிறையிலிருந்த புகழேந்திப் புலவரை வருவித்து, அரசி கதவைத் திறக்கும்படி செய்யுமாறு அவரை வேண்டினன். அவர் அதற்கிணங்கி, "நூலினும் நுண்ணிய இடையுடைய நங்காய்! பெருமை பொருந்திய அரசர், உனக்குச் செய்த இரண்டொரு சிறு பிழைகளைப் பொறுப்பதன்றோ, பெருங்குடியிற் பிறந்த அருங்குணவதியாகிய உனக்கு அழகு?" என்ற கருத்தையமைத்து ஒரு கவி பாடினர். அதைக்கேட்ட அரசி கோபந் தணிந்து கதவைத் திறந்தனள். 'மாதர்க்கிதம்' என்ற உண்மையை மறந்து, கூத்தர் அரசிக்குக் கோபத்தை மூட்டினார். நுண்ணுணர்வுடைய

புகழேந்தியாரோ, அவ்வுண்மையை அனுசரித்து அரசியின் கோபத்தை ஒட்டினர்! இவரன்றோ புலமை நிரம்பிய பாவலர்!

அன்றே அரசன் புகழேந்தியாரைச் சிறையினின்று விடுவித்து, அவரைத் தனது சமஸ்தானத்திலேயே மிகவும் பெருமையோடு வைத்திருந்தான்.

அப்பால், இவர் **சந்திரன் சுவர்க்கி** என்ற ஒரு சிற்றரசன் வேண்டுகோளுக்கு இசைந்து, நளன் கதையை வெண்பாவாகப் பாடி முடித்தனர். புகழேந்திப்புலவர்க்கு அழியாப் புகழ் தந்தது இந்த நூலே. இதனாலேயே இவர்க்கு 'வெண்பாப் புலி' என்ற பட்டமுங் கிடைத்தது. இந்த நூலின் அருமை பெருமை இவ்வளவென்று சொல்லுதற்கு இயலாது.

இப் பாவலரிடத்துப் பகைமை பாராட்டிவந்த ஒட்டக்கூத்தரும், இவர் கவித்திறத்தைப்பற்றி உள்ளுக்குள்ளே மகிழ்ச்சிகொண்டிருந்தனர். ஒருநாள் இவர் தம்மிடம் பகைமை கொண்டு தமக்குப் பலவகைத் துன்பங்களைச்செய்து வந்த ஒட்டக்கூத்தரைக், கொன்று தொலைத்து விடுவதெனத் தீர்மானித்து, அதற்கேற்ற சமயம் பார்த்து அவர் வீட்டின் புறத்தே ஒளிந்திருந்தார். அப்போது கூத்தர் மனைவி, கூத்தரைப் போஜனத்துக்கழைத்தாள். அவர் "இன்றிரவு எனக்குப் போஜனம் வேண்டாம்" என்றனர். "சர்க்கரை கலந்து காய்ச்சிய பாலேனும் சிறிது அருந்துங்கள்" என்று வேண்டினள் அவர் மனைவி. அப்பொழுது கூத்தர், "சர்க்கரைமட்டுமல்ல, புகழேந்தி பாடிய நளவெண்பாவின் சாரத்தையும் பிழிந்து கலந்து கொடுத்தாலும் நான் வேண்டேன்" என்றனர். அதனைக் கேட்டிருந்த புகழேந்திப்புலவர் மிகவும் மகிழ்ச்சியடைந்து, மறைவிடம் விட்டு வெளிப்பட்டு கூத்தரிடம் கொண்டிருந்த கோபத்தை விட்டு, அன்றுமுதல் இருவரும் மிகவும் சினேகமாயிருந்தனர்.

புகழேந்திப் புலவர் இயற்றிய இக் கோவலன் கதை, தாசி மாதவிக்குப் பொருள் கொடுக்கச் சிலம்பை விற்கப்போன தன் கணவன் கோவலனை ஆராயாது கொன்றானெனப் பாண்டியன் மீது கோபித்து, கண்ணகி மதுரையைத் தன் கற்பின் வலியால் நெருப்புக்கிரையாக்கிய கதையைக் கூறும்.



# கோவலன் கதை

### விநாயகர் துதி.

முந்திமுந்தி விநாயகனே முக்கணனார் தம்மகனே
ஐந்து கரத்தோனே அருளுமைபாள் புத்திரனே
விக்கின விநாயகனே வெண்ணைபுண்டோன் தன்மருகா
முக்கணனார் பெற்றெடுத்த மூஷிக வாகனனே
வெட்பாலைக் குள்ளிருக்குஞ் சப்பாணிப் பிள்ளையாரே
சப்பாணிப் பிள்ளையாரே பொற்பாதம் நான்மறவேன்
கோவலனார் தம்கதையைக் குவலயத்தில் நான்பாட
வின்னங்கள் வாராமல் விநாயகனே முன்னடவாய்

### சுப்பிரமணியர் துதி.

அவனிமிசை பவனிவரும் ஆறு முகத்தோனே
சிவகாமி புத்திரனே தெய்வானை நாயகனே
வள்ளியை மணம்புணர்ந்த வடிவேற் கரத்தோனே
புள்ளி மயிலேறும் புண்ணியனே காசினியில்
இக்கதையை யான்பாட இன்பமா யென்னாவில்
ஒக்கவே நீயிருந்து உகந்தருள்வாய் வேலவனே

### சொக்கநாதர் துதி.

சோலைவயல் சூழ்மதுரை சோம சுந்தரேஸ்பரரே
ஆல விடமுண்ட ஆலவாய்ச் சொக்கேசா
அந்தமா யிக்கதையை அன்பாகப் பாடுதற்கு

என்தனுட நாவி னினிதாய்க் குடியிருந்து
தப்புகள் வாராமல் தாயாரென் மீனாட்சி
ஒப்பும் படியாக உத்தமரே காத்தருளும்

## திருமால் துதி.

ஆலிலைமேற் பள்ளிகொண்ட ஆதிநா ராயணரே
பால்வெண்ணெய் தயிருடனே பரிவாக வுண்டவரே
பாற்கடலிற் பள்ளிகொண்ட பஞ்சா யுதத்தோரே
தீர்க்கமா யென்னாவில் தீவிரமாய் வந்திருந்து
குற்றங்கள் வாராமல் கோவிலனார் தன்கதையை
சுத்தமாய்ப் பாடுதற்குத் துழாய்மௌலி காத்தருளும்

## சரஸ்வதியம்மன் துதி.

வாணி சரஸ்வதியே மறையவனார் தேவியரே
காணிக்கை யாகவேநான் களிப்பாக வுன்தனக்கு
பால்பழம் சர்க்கரையும் பருவிளாம் பழத்துடனே
கால்கண்ட நாழிகைக்கு கடுகப் படைத்திடுவேன்
பாலன்கோவி லன்கதையைப் பாரில்யான் பாடுதற்கு
கால னணுகாமல் கதையொன்றுஞ் சோராமல்
பத்தினியாள் தன்கதையில் பழுதொன்றும் நேராமல்
உத்தமியாள் தன்கதையி லொன்றுங் குறையாமல்
பாடவே யென்னாவில் பாரதியே இப்போது
கூடவே நீயிருந்து கொண்டணைக்க வேணுமம்மா

## கதையின் வரலாறு.

பட்டணமாம் பட்டணமாம் காவிரிப்பூம் பட்டணமாம்
கஞ்சிகொண்டு மதவடைக்குங் காவிரிப்பூம் பட்டணமாம்
காவிரிப்பூம் பட்டணத்தில் கனகமணி வர்த்தகர்கள்
மாநாய்கன் செட்டிஎன்றும் மாச்சோட்டான் செட்டிஎன்றும்
அத்தானும் அத்தானும் அழகுகப்ப லோட்டிவந்தார்
மைத்துனனும் மைத்துனனும் வர்ணகப்ப லோட்டிவந்தார்
இராவோடு ராத்திரும்பும் ஏழுலட்சம் சோங்குகப்பல்

பகலோடிப் பகல்திரும்பும் பத்துலட்சம் சோங்குகப்பல்
படவி லரிசிவரும் பட்டணத்து மாலைவரும்
சோங்கு மிளகுவருஞ் சொர்ணகப்ப லேறிவரும்
இப்படிக்குத் தாமிருந்தார் இன்பமுடன் வர்த்தகர்கள்
இவர்கள் மரபதனி லிலங்குமொரு முத்துச்செட்டி
பிள்ளையில்லை யென்றுசொல்லிப் பேருலகிற் றவமிருந்தார்
நந்தவனம் பூந்தோட்டம் நதிக்கரையிற் றானும்வைத்தான்
பொய்கைக் கரைகளின்மேல் புஷ்பவனந் தானும்வைத்தான்
கைலை தனிலிருந்து காமதேனு அங்குவரும்
நூலேணி கீழ்போட்டு நொடிக்குமுன் தானிறங்கி
புல்லுகள் மேய்ந்து பொய்கையிற் றானிறங்கி
தாமரைப் பொய்கையிலே தாகமது தானருந்தி
மன்னன்முத்து செட்டிதனை வாழ்த்தி கயிலாயம்
நூலேணி மேலேறி நொடிக்குட் போய்ச் சேர்ந்திடுமாம்
அன்றுபோய் மற்றுநாள் அன்பாய் வரும்பொழுது
காமதேனு போகிறதைக் கண்டது கன்றதுவும்
அம்மாநீ போகுமிடம் அழைத்துப்போ வென்றுசொல்லி
கன்றது பின்தொடரக் காமதேனுந் தானழைத்து
பூங்கா வனந்தேடிப் பாங்கா வந்ததுவே
புல்லுகளைத் தான்மேய்ந்து பொய்கைஜலந் தானருந்தி
நூலேணி மேலேற நோக்குமந்த வேளையிலே
பசுமேய்ந்து போகிறதைப் பார்த்துவிட்டான் முத்துச்செட்டி
பட்டிமா டிங்கேவந்து பயிரெல்லா மேயுதென்று
கவுண்டுக்கல் கொண்டுமல்லோ கனமா யடிக்கையிலே
காமதே னுக்குத்தப்பி கன்றுக்குப் பட்டுதங்கே
கன்றுக்குப் பட்டவுடன் கடுக விழுந்ததுகாண்
அம்மாடி யென்றுசொல்லி அலறி யிறந்ததங்கே

## காமதேனு சாபமிடல்.

காமதேனு கண்டலறி கடுகவே ஓடிவந்து
இச்சாபம் பெற்றுலகி லிவனிருக்கும் வேளையிலே

அழுதகண் ணுஞ் சிந்தையுமா யடித்துப் புரண்டெழுந்து
ஆகெடுவா யென்தனுட அருமை மகவதனை
பதினாறு வயதளவும் பால்கொடுத்து நான்வளர்த்தேன்
பெற்று வளர்த்ததொரு பெருமை யறியாமல்
கவுண்டுகல் லாலெறிந்து கன்றதனைக் கொன்றாயே
ஆன படியாலே யான்பெற்ற பாலகன்போல்
உன்தன் வயிற்றிலே உதிக்கின்ற மைந்தனுக்கு
பதினாறு வயதினிலே பால னிறப்பனென்று
காமதேனு சாபமிட்டு கைலைக்குச் சேர்ந்ததுகாண்

## மணியரசன் மைந்தன் மாகாளிக்குப் பிரார்த்தனை கூறுவது.

பட்டணமாம் பட்டணமாம் மதுராபுரி பட்டணமாம்
ஆறுயிரம் பாண்டியர்கள் அணிதிரளார் மன்னவர்கள்
மதுரை யறுகாதம் வாழ்மதுரை முக்காதம்
தேனார் மதுரையது தென்மதுரை யாண்டிருந்தார்
மதுராபுரி பட்டணத்தில் மணியரசன் வாணியனும்
மணியரசன் வாணியற்கு மைந்தர்களும் நாலுபேராம்
முதற்றார மங்கையர்க்கு மூன்றுபேர் மைந்தர்களாம்
மறுதார மங்கையர்க்கு மைந்த னொருவனுண்டாம்
இப்படிக்குத் தானிருக்க இன்பமுள்ள வாணியனும்
சாகிற நாளையிலே தன்மைந்தர் நால்வருக்கும்
உண்டான திரவியத்தை இரண்டாய்ப் பகுத்தானும்
முதற்றாரம் பெற்றமைந்தர் மூவருக் கொருபாகம்
மறுதார மீன்றதொரு மைந்தனுக் கொருபாகம்
பாகங்கள் வாணியனும் பகுந்து கொடுத்தானும்
மைந்தரும் மக்களுடன் வாழ்ந்திருக்கும் நாளையிலே
வாழ்ந்திருக்கும் நாளையிலே மறுதார மைந்தனவன்
எண்ணெய்க் குடமெடுத்து இன்பமுடன் வாறானே
மதுரை யறுகாதம் வகையாகச் சுற்றிவந்தான்
எண்ணெய்விலை யாகாமல் எங்குமவன் சுற்றிவந்தான்

மதுரையைக் காக்கின்ற வடபத்ர காளிகோயில்
முடிசூடும் பாண்டியர்கள் முப்பிறப்பிற் செய்வினையால்
இப்பிறப்பிற் குழந்தை யில்லா தனைக்கருதி
காளியம்மன் சந்நிதியைக் கதவடைத்தார் பாண்டியர்கள்
சார்த்திக் கதவடைத்துத் தாள்பூட்டி மண்ணறைந்தார்
தேடி யொருவரிங்கு திருவிளக் கேற்றினரை
காளியம்மன் கோவிலுக்குக் கனவிளக்கு வைத்தவரை
ஆர்விளக் கேற்றினும் ஆக்கினைகள் செய்திடுவோம்
எவர்விளக் கேற்றினும் இரண்டுதுண் டாக்கிடுவோம்
இப்படிக்குச் சொல்லியவர் எங்கும் பறையறைந்தார்
தேசத்தில் யாவருக்குந் தெரிவிக்கும் நாளையிலே
அன்னேர வேளையிலே அன்பான வாணியனும்
காளியம்மன் கோவில்முன்னே கடுகெனவே ஓடிவந்து
எண்ணெய்விற்று வந்தாலே ஏந்திழையே யுன்தனுக்கு
ஆயிரந் தோர்விளக்கு அன்பாக வைப்பேனென்று
பிரார்த்தனை செய்துகொண்டு பிரியமுடன் போனனே
அப்படியே எண்ணெயெல்லாம் அன்பாக விற்றுவிட்டு
மாகாளி கோவிலின்முன் வாணியனும் வந்துநின்று
பூட்டியிருக் குங்கதவைப் புண்ணியனுந் தான்திறந்து
ஆயிரந் திருவிளக்கு அன்றிரவி லேற்றிவைத்து
அடிபணிந்து வாணியனும் அரண்மனைக் கேகிவிட்டான்
ஆறுயிரம் பாண்டியர்கள் அந்நேர வேளையிலே
உப்பரிகை மேலேறி உலாவித் திரிகையிலே
காளியுட சந்நிதியில் கண்டார் திருவிளக்கை

## திருவிளக்கிட்டவரைப் பாண்டியர் பிடித்து வரச் சொல்லியது.

அப்போது பாண்டியர்கள் அருகே யிருந்ததொரு
சேவகரைத் தானழைத்து சேதியென்ன சொல்லுகிறர்
உத்தரவைத் தான்கடந்து வைத்ததார் திருவிளக்கு
கண்டு பிடித்தவனைக் கடுகெனவே கொண்டுவாரும்

திருவிளக்கு வைத்தவனைத் தேடிப் பிடித்துவாரும்
என்ன-அப்போது சேவகர்கள் ஆள்தேடி வாருர்கள்
வீதிகள் தோறும் விசாரித்து வாருர்கள்
வாணியர் தெருவதனில் வந்து விசாரிக்கையிலே
கூடப் பிறந்ததொரு கொற்றவர்கள் தம்பியரை
காட்டிக் கொடுத்தார்கள் கனமான அண்ணர்களும்
அப்போது சேவகர்கள் அக்கணமே ஏதுசெய்தார்
கட்டிப் பிடித்துக் கடுகவே கொண்டுவந்தார்
பாண்டியன் முன்பாகப் படைவீரர் கொண்டுவந்தார்
கட்டிய கட்டோடே கச்சேரிக்குக் கொண்டுவந்தார்
ஆருயிரம் பாண்டியர்கள் அந்நேர மேதுசெய்தார்
எங்கள்-உத்தரவு தான்மீறி வைத்ததினுற் றிருவிளக்கை
காளிக்கு முன்பாகக் கண்டதுண்டஞ் செய்யுமென்ருர்
அப்படியே காவலர்கள் அங்கவனைக் கொண்டுவந்தார்

## வாணியனும் வாணிச்சியும் மீரணமடைதல்.

காளிகோவில் முன்பாகக் கடுகவே கொண்டுவந்தார்
திருப்பரங் குன்றக்காடு தெய்வகாளி கோவில்முன்னே
அகலக்கல் சகடப்பாறை அம்மனுட பலிபீடம்
வெண்கலப் பாறைமுன்னே விரைவாகக் கொண்டுவந்தார்
வீசினுர் வாளாலே வெட்டினு ரிரண்டுதுண்டாய்
அந்நேர வேளையிலே அவன்சிரசு தானெகிரி
காளி மடிமேலே கடுகனவே தான்வீழ்ந்து
கதறி யழுகிருனே கட்டழக னப்போது
உபகாரஞ் செய்தேனம்மா அபகாரம் நேர்ந்ததுவே
என்ன-அப்போது காளியம்மன் அஞ்சாதே மகனேயென்று
ஆதரவு சொல்லியல்லோ அடைவாக ஏதுசொல்வாள்
ஒருவன் பழிக்குநாளை உலகம்பழி வாங்கிவைப்பேன்
மைந்தன் பழிக்குநாளை மதுரைபழி வாங்கிவைப்பேன்
என்றுசொல்லி காளியவ ளிருக்கின்ற வேளையிலே
அப்போது தானிறந்த அவ்வாணி யன்தேவி

வாணியன் தேவியவள் மயிலனையா ளோடிவந்து
மோதி யறைந்துகொண்டு மொய்குழலாள் தானிறந்தாள்
சோலை மலருடைய சொக்க ரதுவறிந்து
வாணியன் தன்னுயிரும் வாணிச்சி தன்னுயிரும்
தங்கச் சிமிழ்தனிலே தானடைத்தார் சொக்கலிங்கம்
கடவுள் முகம்நோக்கி காளியம்ம னேதுசொல்வாள்
வரனேஇப் பிறப்புநீக்கி மறுபிறப்பு யான்பிறந்து
வணிகசெட்டி கோவிலற்கு மனையாட்டி யாகவந்து
விளக்கவித்த பாண்டியரை வெட்டித் தலைசாய்த்து
மணிக்குடலைத் தான்பிடுங்கி வந்திடுவேன் கோயிலுக்கு
என்று மவளுரைத்து இருந்தாளே காளியரும்
சோலை மலருடைய சொக்க ரதுவறிந்து
காளியின் தன்னுயிரும் கடுகவே தான்பிடித்து
தங்கச் சிமிழதிலே தானடைத்தார் சொக்கலிங்கம்
மூவ ருயிரதனை மூக்கண்ண ரடைத்துவைத்தார்
இந்தவிதமாக எங்கள் சொக்கர் தாமிருக்க
முக்கண்ண னைக்கருதி முத்துச்செட்டி மனைவியோடு
பிள்ளையு மில்லையென்று பெருந்தவசு தாம்செய்தார்
மைந்தனு மில்லையென்று மகாதபசு தாம்செய்தார்
அப்போது சொக்கலிங்கம் ஆண்டவ ரேதுசொல்வார்
முத்துச்செட்டி யின்தேவி மொய்குழலாள் வர்ணமாலை
வர்ணமாலை மயிலனைக்கு மைந்தன்வரந் தான்கொடுத்தார்

## கோவிலன் கண்ணகி மாதகி இம் மூவர்கள் உற்பத்தி.

வர்ணமாலை கர்ப்பமதில் மைந்தனு யுண்டுபண்ணூர்
பத்துமாதம் சென்றபின்பு பாலகனும் தான்பிறந்தான்
கோவில னென்றவர்க்குக் கொடுத்தார்கள் பேருமப்போ
அட்டாளுஞ் சொக்கரைப்போல் அழகுடைய மன்னவனும்
தேமல் பிறையழகன் தெள்ளுமணி வாசகனூர்
உருமாலைக் கட்டழகன் உத்தமனூர் கோவிலனும்
அள்ளித் தெளித்ததுபோல் அழகு சிறுதேமல்

மாங்கா முடியழகன் மாதளம்பூ மேனியனும்
செக்கச் சிவந்தவன்காண் செங்கீரைத் தண்டழகன்
அட்டாளுஞ் சொக்கரைப்போல் அழகுடைய மன்னவன்தான்
சோமன்கட்டி வீதிவந்தால் சுவாமிசொக் கேசரென்பார்
மண்டைகட்டி வீதிவந்தால் மதுரைவாழ் சொக்கரென்பார்
பார்த்தால் முதலியென்பார் பார்ப்பாரச் சாதியென்பார்
கண்டால் முதலியென்பார் கன்னடிய சாதியென்பார்
இப்படிக்குக் கோவிலனும் இருந்துவளர் நாளையிலே
அப்போது பாண்டியர்கள் அன்பாக ஏதுசெய்தார்
மைந்தன்வரம் வேண்டுமென்று மலைமேல் தவமிருந்தார்
பிள்ளைவரம் வேண்டுமென்று பெருந்தபசு தாமிருந்தார்
ராஜகன்னி கோவிலிங்கி நலமாகத் தவமிருந்தாள்
அப்போது சொக்கலிங்கம் ஆண்டவனு ரேதுசெய்தார்
காளியுட தன்னுயிரைக் கடுகெனவே தான்பிடித்து
எலுமிச்சங் கனியாக்கி யீந்தாராம் சொக்கலிங்கம்,
கோவிலிங்கி கன்னியர்க்குக் கொடுத்தார் நலமாக
வாங்கியதை யுண்டாளாம் மனமகிழ்ந்து கோவிலிங்கி
அதுவேதான் கர்ப்பமாய் அரிவையந்த மாதினுக்கு
பத்துமாதஞ் சென்றதுகாண் பைங்கொடியாள் மங்கையர்க்கு
வலதுகால் செஞ்சிலம்பு இடதுகை செப்பேடு
கழுத்திலே பூமாலை கன்ன வழியாக
கன்னத்து வழியாகக் கட்டழகி பெண்பிறந்தாள்
அப்போது பாண்டியர்கள் அனேவோரு மென்னசொல்வார்
பஞ்சாங்கந் தான்பார்க்கும் பார்ப்பார் தமையழைத்து
சீக்கிரமாய் வாருமென்று சேவகரைத் தாமனுப்ப
ஓடி யழைத்து ஒருநொடியில் வந்தார்கள்
நாழிகை பொருத்தமது நலமாகப் பாருமென்றார்
அப்போது சோதிடத்தை ஆராய்ந்து சொல்வார்கள்
மாலையிட்டுப் பெண்பிறந்தால் மதுரைதனக் காகாது
கொடியிட்டுப் பெண்பிறந்தால் கொற்றவருக் காகாது
வாய்விட் டழுதாலே வடமதுரை வெந்துவிடும்

தேம்பி யழுதாலே தென்மதுரை வெந்துவிடும்
மரப்பெட்டி தனிலடக்கி வைகையிலே தள்ளுமென்றார்
அப்போது பாண்டியர்கள் அந்தக் குழந்தைதனே
கையி லெடுத்துவரக் கட்டளையு மிட்டார்கள்
அப்போது கோவிலிங்கி அழுது புலம்புகிறாள்
குழந்தையைத் தான்பார்த்து கோவிலிங்கி புலம்புகிறாள்
தங்கத்தாம் பாளத்தில் தையலரைத் தான்வளர்த்தி
பாலைக் கறந்து பக்கத்தில் தானும்வைத்தாள்
தாதிமார் கையதனில் தான்கொடுத்தாள் மகவதனை
தாதியர்கள் பாலகியைத் தானெடுத்துக் கொண்டுவந்து
பாண்டியர்கள் முன்பாகப் பக்குவமாய் வைத்தார்கள்
பாண்டியர்கள் மகவதனைப் பார்த்து மிகவழுதார்
இதற்கோ தவமிருந்து ஏந்திழையைப் பெற்றெடுத்தோம்
பெற்ற மகள்தன்னைப் பெட்டியிலே வையுமென்றார்
பெட்டியிலே பக்குவமாய்ப் பிறந்தபெண்ணை வைத்தார்கள்
எட்டுகட்டு கட்டியவர் இபலர்கச் சீலுமிட்டார்
வைகையிலே தள்ளுமென்று வகையுடனே சொன்னார்கள்
அந்நேர வேளையிலே ஆரணங்கைக் கொண்டுவர
வைகைக் கரைபுரண்டு வருகுது வெள்ளமது
ஓடுகிற வெள்ளத்திலே உத்தமியைத் தள்ளிவிட்டார்
வைகை தனில்மிதந்து வாறாளே கண்ணகியாள்
சுற்றிவந்து மீன்களாடச் சுழல்வண்டு கீதம்பாட
கரைபுரண்டு வெள்ளமது காவிரிபோல் வருகுதங்கே
ஐந்துதலை நாகம் அலைந்துகெட்டு வருகுதங்கே
வெள்ளமதில் மிதந்து விரைவாய்வரும் பெட்டிகண்டு
மரப்பெட்டி மேலேறி வருகுது நாகமது
வைகைமணற் றிடலோரம் வந்து ஒதிங்கிடவே
அப்போ-குவ்வாகுவ்வா வென்று குழந்தை யழுகுதுகாண்
பெட்டியைத் தான்திறந்து பொட்டெனப் பார்க்கையிலே
கோடிசூரியன் போலக் குழந்தையைக் கண்டது
இந்தக் குழந்தைதனக் கேதுநாம் செய்வோமென்று

நாகரத் தினத்தைக்கக்கி நலமாக வைக்கையிலே
எங்கும் பொருந்தவில்லை இக்குழந்தை தேகமதில்
வலதுகாற் சிலம்புதனில் வைத்தது ரத்தினத்தை
அதிலே பொருந்திடவே அன்பான ரத்தினமும்
நாகரத்னச் சிலம்பெனவே நலமாகப் பெயர்கொடுத்து
ஐந்துதலை நாகமது அந்தக் குழந்தைதனை
காளியென்று தானறிந்து கனமாக வேதுசெய்யும்
கன்னவழி யாய்ப்பிறந்த கட்டழகி யாகுமென
கண்ணகியா ளென்றுசொல்லிக் கன்னிக்குப் பெயர்கொடுத்து
பெட்டியை வைகையிலே கட்டியல்லோ தள்ளியது
வைகை பெருகியங்கு மணலும் திரண்டோட
காவிரிப்பூம் பட்டணமாம் கரையிலே வருகுதங்கே
மைத்துனனும் அத்தானும் வர்ணகப்ப லோட்டிவைத்தார்
அத்தானும் மைத்துனனும் அழகுகப்ப லோட்டிவைத்தார்
வருகிற பெட்டியதை மாநாய்கன் கண்டானே
கட்டுமரங் கட்டியல்லோ கடுகெனவே தானேறி
பிரிய முடனே அந்தப் பெட்டியைத் தானெடுத்து
சித்திரமுகச் சாவடியில் சீராகக் கொண்டுவந்தான்
மரப்பெட்டி என்னதென்றான் மாச்சோட்டா னப்போது
மாநாய்க னுள்ளிருக்கும் வஸ்துவு மென்னதென்றான்
அப்படியே நல்லதென்று அன்பாகக் கொண்டுவந்து
திறந்தார்கள் பெட்டியைத்தான் திட்டமா யந்நேரம்
சூரியனைப் போலத் துலங்குது குழந்தையது
அந்தக் குழந்தையை அன்பாகக் கொண்டுவந்து
வைத்து வளர்த்தானே வகையுடனே மாநாய்கன்
வளர்பிறைச் சந்திரன்போல் வளருகிறாள் கண்ணகியும்
இப்படி யாக இருக்கின்ற வேளையிலே
கடையூர் வசந்தமாலை கன்னியொரு தேவதாசி
அவள்-பிள்ளையில்லை யென்று பெருந்தபசு தானிருந்தாள்
அப்போது சொக்கலிங்கம் ஆண்டவனா ரேதுசொல்வார்
வாணிச்சி தன்னுயிரை மகாதேவர் தாமெடுத்து

எலுமிச்சங் கனியாக்கி இன்பமுடன் தான்கொடுத்தார்
வாங்கி மனமகிழ்ந்து வசந்தமாலை யுண்டாளே
அதுவேதான் மாதமாக ஆரணங்கு கர்ப்பமதாய்
பத்துமாதஞ்சென்று பைங்கொடியும் பெற்றெடுத்தாள்
அழகு குலுங்கிறது ஆனந்தங் கொஞ்சுறது
வடிவு குலுங்கிறது வடிவழகு கொஞ்சுறது
அழகில் மிகுந்தவள்காண் ஆரணங்குக் கப்போது
சாஸ்திரியைத் தானழைத்து சாதகங் குறியுமென்றாள்
சோதிட சாஸ்திரிகள் சொல்லுகிறா ரப்போது
சாஸ்திரத்தைத் தான்பார்த்துச் சாதகங்கள் தாமுரைப்பார்
அஞ்சு வயதில் அரிய சிலம்பெடுத்து
நாட்டியங்கள் கற்று நலமுடன் மாதகியும்
ஆனையின்மேல் கம்பம்நட்டு ஆடுவாள் மாதகியாள்
தித்தியென்பாள் மத்தளங்கள் திமிதியென்பாள் காற்சிலம்பு
ஒத்திவைப்பாள் ஓரடியை ஓலமிடும் பொற்சிலம்பு
பத்தாம் பிராயத்தில் பைங்கொடியாள் மாதகியாள்
அம்பல மேறி ஆடுவாள் மாதகியாள்
மன்மதனைப் போலழகு வாய்த்த தொருவணிகன்
செப்புச் சிலையழகன் செங்கீரைத் தண்டழகன்
அப்பெரிய கொற்றவனை அழைத்து வருவாள்காண்
பன்னிரண்டு தன்வருஷம் பைங்கிளியாள் வைத்திருப்பாள்
பதின்மூன்றும் வருஷத்திலே பைங்கொடியு மாண்டிடுவாள்
இப்படிக்குச் சாதகம் எழுதினார் சோதிடர்கள்
பூரணச் சந்திரன்போற் பொற்கொடி வளருகிறாள்
காவிரிப்பூம் பட்டணத்தில் கனகநிதி மன்னவர்கள்
மாநாய்கன் செட்டியும் மாச்சோட்டான் செட்டியும்
பேருலகி லிருவருமே பெரியதன வர்த்தகர்கள்
ஆயிரந் தலைக்கட்டுக்கு அதிகாரி மன்னவர்கள்
மாநாய்கன் செட்டிவீட்டில் மயிலனையாள் பெண்ணரசி
நாளொரு மேனியாக நட்சத்திரம் போல்வளர்ந்தாள்
பொழுதொரு மேனியாகப் பூவையருந் தான்வளர்ந்து

நித்தமொரு பட்டுடுத்தி நேரமொரு பூச்சூட்டி
கண்ணிமை காப்பதுபோல் காத்து வளர்த்தார்கள்
இப்படி யாகவேதா னிவளிருக்கும் வேளையிலே

## கோவிலனுக்கும் கண்ணகிக்கும் தாம்பூலமாற்றி விவாகஞ்செய்தல்.

காவிரிப்பூம் பட்டணத்தில் கனத்தநல்ல வர்த்தகர்கள்
அன்றையப் போதையிலே அடவாக முத்துச்செட்டி
மாநாய்கன் வீட்டுக்கு வந்துநின்றார் முத்துச்செட்டி
அப்போது பெண்குழந்தை அங்கு வருகையிலே
இந்தப்பெண் ணுருடைய தென்றவனுங் கேட்கையிலே
மாநாய்க னென்தனுட மகளென் றுரைத்திடவே
என்னுடைய மைந்தனுக்கு இன்பமுடன் தாரீரோ
அப்படியே தாரேனென்று அன்பாக வாக்களித்தான்
பரியங்க ளென்னவென்று பண்பாகக் கேட்கலுற்றார்
ஆயிரம் பொன்கொடுத்தால் அரிவைதனை நான்தருவேன்
என்ன-அப்படியே சம்மதித்தார் அன்பான முத்துச்செட்டி
ஆயிரம் பொன்னையெண்ணி அப்போது தாம்கொடுத்தார்
இன்றைக்குப் பரியம் இயலாகச் செய்யுமென்றார்
இன்றெட்டாம் நாளையிலே இசைந்த முகூர்த்தமென்று
நாளிட்டுக் கொண்டாரே நலமுடனே முத்துச்செட்டி
அவர்போன மற்றநாள் அப்புச்செட்டி வந்தாராம்
அன்னநடை மின்போல அரிவையரைக் கண்டாராம்
ஆரிக் குழந்தையென அன்பாகக் கேட்டாராம்
என்னுடைய பெண்ணென் றெடுத்துரைத்தா னப்போது
என்தனுட மைந்தனுக்கு உன்தன்பெண்ணைத் தாரீரோ
தருகிறே னென்றவற்குச் சம்மதித்தான் மாநாய்கன்
பரியமென்ன கொண்டுவாரீர் பண்பாகச் சொல்லுமென்றார்
ஆயிரம்பொன் பரியமென்று அன்பாகத் தான்கொடுத்தார்
பரியங் கொடுத்துவிட்டுப் பண்பாகப் போய்நடந்தார்
அவர்போன மற்றநாள் அங்குலிங்கி செட்டிவந்தார்

கண்ணகியைத் தான்பார்த்துக் கன்னியிவ ளாரெனவே
என்னது குழந்தையென்று எடுத்துரைத்தான் மாநாய்கன்
என்தனுட மைந்தனுக்கு உன்தன்பெண்ணைத் தாரீரோ
தாறேன் பரியமென்ன சாற்றுவீ ரென்றிடவே
ஆயிரம்பொன் பரியமென அன்பாகத் தான்கொடுத்தார்
இன்றெட்டாம் நாளையிலே இசைந்த முகூர்த்தமென்று
நாளிட்டுக் கொண்டுமவர் நலமுடனே போய்நடந்தார்
மாணிக்கஞ் செட்டியவர் மன்னவனும் அங்குவந்தார்
இவர்-அரண்மனைக் குள்ளாக அன்பாக வந்தாரே
மாணிக்கம் போலேஅங்கு மயிலனையைக் கண்டாரே
இது-ஆருடைய பெண்ணென்று அன்பாகக் கேட்டாரே
என்னுடைய பெண்ணென்று எடுத்துரைத்தான் மாநாய்கன்
என்னுடைய பிள்ளைக்கு ஏந்திழையைத் தாரீரோ
அப்படியே தாரேனென்றான் அழகான மாநாய்கன்
என்ன பரிய மெடுத்துரையு மென்றுசொன்னார்
இரண்டா யிரம்பொன் ஏந்திழைக்குத் தாருமென்றார்
அப்படியே தாம்கொடுத்தார் அழகான செட்டியவர்
அவர்போன மற்றநாள் அனேகம்பேர் வந்தார்கள்
இப்படி யாகவேதான் இவரிருக்கும் வேளையிலே
அன்றைய வேளையிலே ஆனதொரு முத்துச்செட்டி
தாம்பூலங் கொண்டுவந்து தனவணிக னோடிவந்தான்
மாச்சோட்டான் செட்டியிடம் வாறார்காண் முத்துச்செட்டி
தாம்பூலம் கொண்டுவந்து தனவணிகன் முன்புவைத்தான்
கலியாண மென்று கட்டழகன் கூறிடவே
ஆர்கலி யாணமென்று அன்பாகக் கேட்கலுற்றார்
என்மைந்தன் கோவிலனுக் கென்று மொழிந்திடவே
ஆருடைய பெண்ணதுகாண் அதுவிபரம் சொல்லுமென
மாநாய்கன் பெண்ணென்று வகையுடனே தாமுரைத்தார்
மாச்சோட்டான் செட்டியார்க்கு வருகுது வெகுகோபம்
கோபம் பெருகுது கொள்ளிகொண்டு வீசுகுது
என்னுடைய பெண்ணையவன் எப்படிக்குத் தான்கொடுப்பான்

இந்தப்பெண் உன்னதென்று எனக்குத் தெரியாதென
மாச்சோட்டான் செட்டியாரும் மன்முத்துச் செட்டியாரும்
வந்தார்க ளிருவருமாய் மாநாய்கன் முன்பாக
மாநாய்கன் முன்புவந்து மன்னவர்க ளேதுசொல்வார்
என்னுடைய பெண்ணதனை எப்படிக்கு நீர்கொடுப்பீர்
நேற்றென்தன் பிள்ளைக்கென்று நேமகஞ் செய்திருக்க
நீதியுண்டோ ஒருவருக்கு நீர்கொடுக்க மன்னவரே
என்று-ஒருத்தர்க் கொருத்த ருகந்துசண்டை செய்தார்கள்
பஞ்சாயத் தார்கள்முன்பாய்ப் பகர்ந்தார்க ளிவ்வழக்கை
திருவுளச் சீட்டுச் சிறப்புடனே போடுமென்றார்
ஆருக் கமைப்போ அவர்களுக் காகுமென்றார்
அப்போது பஞ்சாயத்தார் அனைவோருங் கூடினார்கள்
திருவுளச் சீட்டெழுதிச் சீராகப் போட்டார்கள்
கோவிலன் பேர்வழிக்கு வந்தது சீட்டதுவும்
அவனுடைய பாரியென்று அனைவோருந் தாமுரைத்தார்
அப்படியே சம்மதித்தார் அன்பான செட்டிமார்கள்
அப்போதே கலியாணம் அன்பாகச் செய்யவென்று
பந்த லலங்கரித்தார் பாங்காக அப்போது
முத்தாலே கால்நிறுத்தி முக்காதம் பந்தலிட்டார்
பவளத்தால் கால்நிறுத்திப் பதின்காதம் பந்தலிட்டார்
வெற்றிலே யாலேயவர் வெகுதூரம் பந்தலிட்டார்
எங்கு மலங்கரித்தார் எத்திசையும் நீர்தெளித்தார்
கண்ணாடி சல்லிகட்டிக் கவரிமான் குச்சுவிட்டார்
மணப்பந்தல் முன்பாக வதூவரரைக் கொண்டுவந்தார்
சீக்குக் கழித்தார்கள் சீராக இருவருக்கும்
பெண்ணையு மாப்பிள்ளையும் பிரியா தலங்கரித்து
மணவறையின் மேலாக வைத்தா ரிருவரையும்
தாலி தரித்தானே தனஞ்சயன் கோவிலனும்
அம்மி மிதித்தார்கள் அருந்ததி கண்டார்கள்
சாலுங் கரகமுஞ் சந்திரனைத் தான்தொழுதார்
மாலே தரிக்கையிலே வாய்விட்டுத் தானழுதாள்

மாங்கனியைக் கைகொடுத்து மாலையிட்டார் கோவிலனர்
இப்படி யாகவேதா னிருக்குமந்த வேளையிலே
மாலைகொண்டு வந்ததொரு மடத்தாண்டி போகவில்லை
கூறைகொண்டு வந்ததொரு கோலியனும் போகவில்லை
சாலுகொண்டு வந்ததொரு சாலியனும் போகவில்லை
உற்றார்க்குச் சோறிடலை உறன்முறைக்குப் பாக்கிடலை
பந்தி வழங்கவில்லை வந்தஜனம் போகவில்லை
உற்ற ருறமுறையா ரொருவரும் போகவில்லை
இப்படிக்குத் தானிருக்க இன்பமுட னந்நேரம்
வடிவழகி லேசிறந்த மன்மதனைப் போலழகன்
செக்கச் சிவந்தழகன் செங்கீரைத் தண்டழகன்
மாங்கா முடியழகன் மாதளம்பூ மேனியனும்
சிலைபோல் வடிவழகன் செட்டிமக னேதுசொல்வான்
கலியாணப் பந்தலிலே கச்சேரி வேண்டுமென்றான்
தாலிகட்டும் பந்தலிலே சதிர்வைக்க வேண்டுமென்றான்
ஆரைநாம் வைப்போமென்று ரங்குள்ள வர்த்தகர்கள்

## மாதகி சதிருக்குவந்து கோவிலரை அழைத்துப் போகுதல்.

திருக்கடையூர் பட்டினத்தில் தெய்வரம்பை மாதகியாள்
அவளை யழைத்துவந்து ஆடல்வைக்க வேண்டுமென்றார்
அஞ்சாம் பிராயத்திலே அழகு சிலம்பெடுத்து
அழகு சிலம்புகட்டி ஆடுவாள் மாதகியாள்
என்றுமே கோவிலனு ரெடுத்துரைக்க வப்போது
அப்படியே யாகுதென அனைவோருந் தாமுரைத்தார்
அப்போது முத்துச்செட்டி அழகுதுரை மன்னவனும்
எண்ணாது மெண்ணுகிறான் எண்ணிமனங் குன்றுகிறான்
சாதகமும் பொய்க்காது தலைவிதியுந் தப்பாது
பன்னிரண்டு பிராயத்தில் பைங்கொடி மாதகியாள்
மாதகி யண்டையிந்த மன்னவன் போவானென்று
சாதக முரைத்தது சரியாக ஆச்சுதுகாண்

எப்படி யழைத்தவளை இங்கேசதி ராடவைப்போம்
மகனுக் கிதைச்சொல்லி வருத்தமுற்ருன் முத்துச்செட்டி
அப்போது கோவிலனும் ஐயாவுக் கேதுசொல்வான்
மங்கை யிளங்கொடியாள் மாதகியாள் வந்தாலே
வந்தாலே யல்லது வல்லுயிரைப் போக்கிடுவேன்
அப்படியே அழையுமென்று ஆணழகர் சொன்னரே
சேமக் குருத்தோலை சிறப்பாகத் தான்வாரி
ஈழப் பனையோலை இருபக்கந் தான்வாரி
தாளிப் பனையோலை தலைப்பக்கங் காம்பரிந்து
கணபதி முன்பாகக் காப்பிட்டுக் கொண்டாரே
முத்துப் பதித்ததுபோல் மூன்றுவரி தானெழுதி
பவளம் புதைத்ததுபோல் பத்துவரி தானெழுதி
திருக்கடையூர் பட்டினம்வாழ் தேவதாசி மாதருக்கு
வக்கணையு மொப்பனையும் வைத்து எழுதுகிருர்
கலியாணப் பந்தலிலே கச்சேரி வைக்கவேண்டும்
ஓலைகண்ட நாழிகைக்கே ஓடிவந்து சேரவேண்டும்
என்று எழுதினர் இன்பமுள்ள மன்னவர்கள்
ஓலைச் சுருள்மடித்து உயர்செந்தி ரிக்கையிட்டு
காவலர்கள் சேவகரைக் கட்டழகர் தாமழைத்து
செந்திரிக்கை ஓலைதனைச் சேவகர்கள் கைகொடுத்தார்
ஓலையைத் தான்வாங்கி ஓடின ருத்தமர்கள்
பட்டணமாம் பட்டணமாம் திருக்கடையூர் பட்டணமாம்
திருக்கடையூர் பட்டணத்தை தேடியே வாருர்கள்
வசந்தமாலை முன்பாக வந்துநின்ருர் சேவகர்கள்
வட்டவோ லைச்சுருளை வசந்தமாலை கைகொடுத்தார்
வாங்கியே ஓலைதனை வாசித்தா ளப்பொழுது
அதிலிருந்த மர்மமெல்லாம் அறிந்தாள் வசந்தமாலை
இருதயங் குளிர்ந்து இருதோளும் பூரித்து
சரீரங் குளிர்ந்து சர்வாங்கம் பூரித்து
அம்மாடி யென்மகளே அரிவையரே மாதகியே
வாருமென்று தானழைத்து மங்கையவ ளேதுசொல்வாள்

கஞ்சிகொண்டு களைபறிக்கும் காவிரிப்பூம் பட்டணத்தில்
சோறுகொண்டு மதவடைக்குஞ் சொர்ணகிரி நன்னாடு
காவிரிப்பூம் பட்டணத்தில் கப்பலோட்டும் வர்த்தகர்கள்
மாநாய்கன் செட்டியார் மாச்சோட்டான் செட்டியார்
வரவேண்டு மென்றுசொல்லி வரவோலை யனுப்பிவித்தார்
இக்ஷணமே போய்வாரு மேந்திழையே மாதகியே
என்ன-அப்படியே நல்லதென்று ளாரணங்கு மாதகியாள்
கச்சை வரிந்துகட்டிக் கருங்கச்சை சுங்குவிட்டு
தட்டி வரிந்துகட்டி தானணிந்தாள் பொற்சரிகை
இழையாயிரம் விலைபொன் இந்திரவர்ணப் பட்டாடை
பாவாடை யுள்ளாடை பட்டாடை மேலாடை
குத்தினி ரவிக்கைகளாம் குசும்பாவாம் பொற்சீலை
பிருவெடுத்தா ளொட்டியாணம் பின்பு இளங்கொடியாள்
ஆடைகள் ஆபரணம் அடங்கலுந் தானணிந்து
ஆனையின்மேல் கம்பமது அடைவாகத் தானிறுத்தி
நட்டுவனைத் தானழைத்தாள் நலமான மாதகியாள்
மத்தளமுஞ் சுத்திகளும் வகையாகத் தானெடுத்து
தாயா ரருகில்வந்து தாள்பணிந்து தெண்டனிட்டு
முக்கா லடிவணங்கி மூவிருகால் தெண்டனிட்டு
போய்வர என்தனுக்குப் புகழ்ந்துவிடை தாருமென்றாள்
அப்போது வசந்தமாலை அரிவையவட் கேதுரைத்தாள்
இளநீரி லூரவைத்த இன்பக் களிப்பாக்கும்
தங்கச் சிமிழதனில் தான்கொடுத்தாள் மையுமொன்று
மாது இளங்கொடியாள் மாதகியா ளேதுசொல்வாள்
என்னமாய் நான்கொடுப்பே னேந்திழையே தாயாரே
வெற்றிலையில் மைதடவி மெல்லியரே நீகொடுத்தால்
தொடர்ந்து வருவான்காண் தோகையரே யுன்பிறகே
என்று-வாழ்த்தி வரங்கொடுத்து மகளை யனுப்பிவிட்டாள்
ஏறினா ளானையின்மே லிளங்கொடி மாதகியாள்
ஆனையைத் தான்துரத்தி அன்பாக வாறாளே
காவிரிப்பூம் பட்டணத்தில் கணிகையவள் வாறாளே

கலியாணப் பந்தலிலே கட்டழகி வந்துநின்றாள்
அங்கிருக்கும் வர்த்தகரை அனைவரையுந் தான்பார்த்து
கைகூப்பித் தெண்டனிட்டுக் கட்டழகி நின்றிடவே
மாநாய்கன் செட்டியாரும் மாச்சோட்டான் செட்டியாரும்
உனக்கென்ன வேண்டுமென்று ஒண்டொடியைக் கேட்டார்கள்
என்னுடன்கூ டப்பிறந்த பொன்னுருவி மாலைதனை
கழற்றி யெறிவேன்காண் கட்டழகர் வர்த்தகர்மேல்
ஆர்கழுத்திற் போய்விழுமோ அவரையழைத் தேகிடுவேன்
அதற்குச்-சம்மதிதா னென்று தாம்பூலந் தாருமென்றார்
சம்மதிப் பட்டார்கள் தாம்பூலந் தந்தார்கள்
சிலைபோல் வடிவழகன் செட்டிபிள்ளை கோவிலனை
அந்தப் புரந்தனிலே ஆணழக னையொளித்து
தாயார்வர்ண மாலைதனை தனயனுக்குக் காவல்வைத்து
வெளியி லனுப்பாதே மெல்லி யிளங்கொடியே
வாசலி லிருந்துகொண்டு மன்னவனைக் காருமென்றான்
அப்போ தனைவோரும் அச்சபையில் வந்துநின்றார்
ஆடுமென்று மங்கையர்க்கு அனைவோரும் விடைகொடுத்தார்
தித்தியென்று மத்தளத்தைத் திமிர்தமென்று காற்சிலம்பை
ஒத்திவைத்தா ளோரடியை ஓலமிட்டாள் பொற்சிலம்பை
மத்தளமும் மணிக்குரலும் வர்த்தகர்கள் கேட்டார்கள்
சங்கீத வாத்தியத்தைச் சபையோர்கள் கேட்டார்கள்
சந்தோஷப் பட்டார்கள் சகலமான வர்த்தகர்கள்
ஆடையோ டாபரணம் அன்பாகத் தாம்கொடுத்தார்
மாளாத சொர்ணமதை மங்கையர்க்குத் தான்கொடுத்தார்
ஆனையின்மேல் பொதிபோட்டா ளானதொரு மாதகியாள்
வர்த்தகரைத் தான்பார்த்து மயிலனையா ளேதுசொல்வாள்
என்னுடன்கூ டப்பிறந்த பொன்னுருவி மாலைதனை
கழற்றி யெறிவேனுன் கட்டழகர் வர்த்தகர்மேல்
என்றுசொல்லி மாதகியாள் இபலான மாலைதனை
கையி லெடுத்துக்கொண்டு கட்டழகி யேதுசொல்வாள்
அட்டாளுஞ் சொக்கரை அழகாகத் தானினைந்து

மாயாண்டி சொக்கரை மகாதேவ ரைநினைந்து
மாலையைத் தான்பார்த்து மயிலனையாள் மாதகியும்
எனக்கேற்ற நாயகனை ஏந்திழையே நீபார்த்து
மனதுக் கிசைந்தவொரு மன்னவனைத் தான்பார்த்து
அவர்கழுத்தி லேமாலை அன்பாய் விழுகவென்று
மாலை சுழற்றியே மாதகி யெறியலுற்றாள்
அப்போது பொன்மாலை அங்ஙனவே யேதுசெய்யும்
மாதகிக் கேற்றவொரு மணவாளர் தம்கழுத்தில்
வந்து விழுகவென்று மன்னவரைத் தேடுறது
அந்தச் சமபத்தில் அழகான கோவிலனும்
மாளிகைக்குள் ளேயிருக்கும் மன்னவனார் கோவிலற்கு
மத்தள மணிக்குரலும் மன்னன்காதிற் கேட்டிடவே
பெண்குரலுஞ் சத்தமும் பிரியமாய்க் கேட்டிடவே
கூத்துப்பார்க்க வேணுமெனக் கோவிலனுந் தானெழுந்தான்
தாயாரந்த வர்ணமாலை தையலருந் தான்தடுத்தாள்
கதவைத் திறந்துவிடு கட்டழகி மாதாவே
இல்லாமற் போனாலே என்னுயிரை மாய்ப்பேனென
கதவைத் திறந்துவிட்டாள் கட்டழகி தாயாரும்
அப்போது கோவிலனும் ஆணழகன் தானெழுந்து
சேலத் துருமாலை ஜெமுதாடு பொன்சரிகை
காங்கு உருமாலை கள்ளர்கட்டும் முண்டாசு
ஒருபொன் னொருமுழமாம் ஒற்றைக்கம்பி சோமனது
திருநெல்வே லிச்சோமன் சேர்த்திறுக்கிக் கட்டினனே
தங்க மிதியடியாம் தனிக்குமிழ் ரத்தினமாம்
முத்து மிதியடியாம் முழக்குமிழ் ரத்தினமாம்
முத்து மிதியடியைத் தொட்டு நடந்துவாறான்
ஆலமரப் பிள்ளையார் கோவிலண்டை தேடிவாறான்
தங்கநாற் காலிமேல் தனஞ்சயனும் உட்கார்ந்து
தாம்பூலம் போட்டுக்கொண்டு தனஞ்சயனு மங்கிருந்தான்
அவனழைப் பார்த்தாலே அட்டாளுஞ் சொக்கரென்பார்
அட்டாளுஞ் சொக்கலிங்கம் ஐயரென்று சொல்வாரே

மதுரைவாழ் சொக்கலிங்கம் மகாதேவ ரென்பார்கள்
இப்படி யாகவேதா னிவரிருக்கும் வேளையிலே
அப்போது மாதகியாள் அரிவையருந் தான்பார்த்து
பொன்னுருவி மாலையதைப் பொற்கொடி விட்டெறிந்தாள்
ஆர்கழுத்தி லும்விழாமல் அட்சணமே வருகுதுபார்
கோவிலனைத் தேடி வருகுதுபார் பொன்மாலை
கண்ணுக்குத் தெரியாமல் கழுத்தில் விழுந்ததப்போ
அப்போது மாதகியா ளாரணங்கு தான்பார்த்து
ஆனையை விட்டிறங்கி ஆரணங்கு மாதகியாள்
மாலையைத் தேடிக்கொண்டு வாருளே மாதகியாள்
கோவில னண்டையிலே கொம்பனையாள் வந்துநின்ருள்
வர்த்தகனைப் பார்த்து மயிலனையா ளென்னசொல்வாள்
எனக்கென்ன தியாகம்நீ ரின்பமுடன் தாருமென்ருள்
அளவற்ற சொர்ணமதை ஆணழகர் தான்கொடுத்தார்
மாதகியாள் வாங்கிக்கொண்டு மயிலனையா ளேதுசெய்தாள்
பொன்னுருவி மாலையதைப் புண்ணியனே தாருமென்ருள்
ஏதடி பெண்ணேயென்று இன்பமுடன் கேட்கலுற்ருன்
உன்-கழுத்திலிருக்குது கட்டழகா தாருமென்ருள்
பாராது போலேயவன் பார்த்துவிட்டான் கோவிலனும்
கழற்றிக் கொடுப்போமென்று கட்டழகன் கைபோட்டான்
கழற்ற முடியவில்லை கட்டழகன் கோவிலற்கு
ரம்பத்தைக் கொண்டுவந்து நலமாய றுக்கச் சொன்னுன்
வாளு மழுங்கினது மாலை கழலவில்லை
என்னசெய்வேன் மாதகியே ஏந்திழையே பெண்கொடியே
வாங்கியே கொண்டுபோடி மயிலனையே நான்தாறேன்
மாலை கொடாமலே போனுலும் மன்னவரே
தாம்பூலம் நான்தாறேன் தனஞ்சயரே போட்டுக்கொள்ளும்
அப்படியே தாருமென்ருன் ஆணழகன் கோவிலனும்
வெற்றிலையில் மைதடவி விதமாய்ச் சுருள்கொடுத்தாள்
தாம்பூல மருந்தினபின் தனஞ்சயனுங் கோவிலற்கு
மருந்து மயக்க மதிமயக்க மாகுதுகாண்

உண்ட மருந்தாலே உளறித் தவிக்கிறுனே
மருந்து மயக்கத்தாலே மதிமயங்கி யென்னசொல்வான்
ஆசைதந்த மாதகியே அரிவையரே யுனைப்பிரியேன்
சுகந்தந்த மாதகியே தோகையரே யுனைப்பிரியேன்
நான்கூட வாறேனென்று நலமாகத் தானெழுந்தான்
மாநாய்கன் செட்டியாரும் மன்னன்முத்துச் செட்டியாரும்
ஓட்டம் பெருநடையா யோடிவந்தா ரிருவருமாய்
அப்பா மகனேயென்று அழுதுகொண்டு வருகிறுர்கள்
எங்களை விட்டுமல்லோ எவ்விடத்தில் நீபோறுய்
மாலையிட்ட தேவி மயிலனையாள் தானிருக்க
கூறையிட்ட தேவியுந்தன் கொம்பனையா ளிங்கிருக்க
எங்களை விட்டுமே யெவ்விடத்தில் நீபோறுய்
வாருமென்று சொல்லி வழிமறிந்துத் தானிழுத்தார்
அப்போது கோவிலனு ராணழக ரேதுசொல்வார்
தாயேது தந்தையேது தையல்பெண் சாதியேது
ஆசைதந்த மாதகியா ளரிவையரு மிங்கிருக்க
சுகந்தந்த மாதகியாள் சுந்தரியா ளிங்கிருக்க
இவளைவிடப் பெண்சாதி யென்தனுக் காருமில்லை
அவளுடனே செல்வேனென் ருணழகன் செல்லலுற்றுன்
அப்படியா வென்று அனைவோரும் பின்னிடைந்தார்
அப்போது கோவிலனு ரானையின் மேலேறி
மாதகியுங் கோவிலனும் வாறுர் திருக்கடையூர்
திருக்கடையூ ரிருவருமாய் தெருவில்வந்து நின்றுர்கள்
ஆனையை விட்டுமவ ரன்பாகத் தாமிறங்கி
அமரகண் டீசர்கோவி லன்பாக வாறுர்கள்
பலிபீட முன்பாகப் பாவையரும் வந்துநின்றுள்
பலிபீடந் தானடித்துப் பைங்கிளியு மேதுசொல்வாள்
உன்னைவிட்டு நான்பிரியேன் உத்தமரே யென்றுரைத்தாள்
அமரகண் டீஸ்வரர்மே லாணையிட்டுத் தான்கொடுத்தாள்
முன்தானை போட்டுமந்த மொய்குழலுந் தாண்டினுளே
உன்னைவிட வேறேயொரு மன்னவனை நான்பாரேன்

என்தனுக்குப் பிரமாணம் இன்பமுடன் செய்யுமென்றாள்
அப்போது கோவிலனு ராணழக ரேதுசொல்வார்
உன்னைவிட்டு நான்பிரியேன் உத்தமியே யென்றுரைத்தார்
தாயும்நீ தந்தையும்நீ சகலமும் நீயேயென்றார்
உன்னைவிட நானும் ஒருவர்முகம் பாரேனென்றார்
அந்தப் புரந்தேடி அரிவையவள் வாறாளே
அரண்மனைக் குள்ளாக ஆணழகன் வந்துநின்றான்
தோம்புத்திரைக் கட்டிலந்த சுந்தரியாள் தான்போட்டாள்
சலசலப் பாயொன்று தையலருந் தான்போட்டாள்
அதின்மேலுட் காருமென்று ளாரணங்கு மாதகியாள்
அப்படியே யுட்காந்தா ராணழகர் கோவிலனார்
கட்டிலின் காலொடிந்து கட்டழகர் தாம்விழுந்தார்
என்னடி மாதகியே இப்படிக்கு நான்விழுந்தேன்
என்ன-ஆசைதந்த மாதகியா ளரிவையவள் ஓடிவந்து
என்னதான் செய்வேன்கா ணென்னுடைய புண்ணியரே
இந்தநல்ல கட்டில்விட என்தனுக்கு வேறேயில்லை
உன்னாலே யென்தனுக்கு உண்டாக வேணுமென்றார்
அப்படியே நல்லதென்று ராணழகர் கோவிலனார்
அன்னேர வேளையிலே அரிவையந்த மாதகியாள்
பானையைத் தான்கழுவிப் பனிநீ ருலைவார்த்து
சின்னசம்பா வரிசி தீட்டி யுலையிலிட்டாள்
முத்துப்போல் சாதம் வடித்தாளே மொய்குழலாள்
நல்லவெல்லம் பூசுணைக்காய் நாலுவிதஞ் சமைத்தாள்
கத்திரிக்காய் கொய்திடுவாள் கருணை புளியிடுவாள்
வாழைக்காய் கொய்திடுவாள் வாழைத்தண்டு நாரிழுப்பாள்
ஈழப் பலாக்காயை இளமுள்ளு போக்கிடுவாள்
சோலைப் பலாக்காய்கள் சுளைதிருத்தி வாங்கிடுவாள்
காயுங் கறிவகையுங் கனமாகத் தான்சமைத்து
வாழை யிலைபோட்டு வட்டித்தாள் சாதமது
அப்போது கோவிலனார் அன்னமதைத் தான்புசித்து
சாப்பிட் டிளப்பாறி தாம்பூலந் தான்தரித்து

முடிமன்னர் போலழகன் முத்துவிற்கும் வியாபாரி
சேமக் குருத்தோலே செம்பொன் னெழுத்தாணி
தாளிப் பனேயோலே தலேப்பக்கங் காம்பரிந்து
முத்துப் புதைத்ததுபோல் மூன்றுவரி தானெழுதி
மாநாய்கன் செட்டியார்க்கு மன்ன னெழுதுகிறுன்
வக்கணேயு மொப்பனேயும் வைத்து எழுதுகிறுன்
திருக்கடையூர் பட்டணத்தில் தெய்வரம்பை மாதகியாள்
தெய்வரம்பை மாதகியாள் தேன்மொழியாள் தன்னிடத்தில்
வருத்தப் படுகிறேன் மயிலனேயாள் தன்னிடத்தில்
சித்ரமுகச் சாவடியில் தேடிவைத்த திரவியங்கள்
பன்னிரண்டு கப்பல்பணம் பாங்காய் வரவேண்டும்
வாரா திருந்தால்நான் மாண்டு மடிந்திடுவேன்
ஓலேகண்ட நாழிகையி லுடனே அனுப்பவேண்டும்
என்றுசொல்லி ஓலேயிலே எழுதினு ரப்பொழுது
செந்திரிக்கந் தாள்போட்டுச் சேவகனேத் தானழைத்து
காற்றிலும் வேகமுள்ளோன் கையிலோலே யைக்கொடுத்து
காவிரிப்பூம் பட்டணத்தில் கரைதுறைக்கு போகவென்றுன்
அப்போது சேவகனும் அடைவுடனே ஓடிவந்து
காடு மலேதாண்டி கடுகெனவே ஓடிவாறுன்
சில்லென்ற காடுவிட்டுச் செடியும் வனந்தாண்டி
ஓட்டம் பெருநடையா யோடி வருகிறுனே
தண்ணீர்கண்டால் குடியானே தாவுகண்டால் தங்கானே
பிணேயோடு மாடுகண்டாற் போனவழி பின்விலகான்
கஞ்சிகொண்டு களேபறிக்குங் காவிரிப்பூ நன்னுடு
சோறுகொண்டு மதவடைக்கும் சொர்ணகிரி தேடிவாறுன்
மாநாய்கன் செட்டிமுன்னே வந்துநின்றுன் மன்னவனும்
தூதுவனு மப்போது சுருளோலே தான்கொடுத்தான்
செப்புவா ஞேர்வசனம் சீராகக் கோவிலனும்
எங்கிருந்து வந்தவன்காண் எனக்கறியச் சொல்லுமென
அப்போது தூதுவனும் ஆணழக னென்னசொல்வான்
திருக்கடையூர் பட்டணத்தில் தெய்வரம்பை மாதகியாள்

அவளிடத்தில் தானிருக்கும் அழகான கோவிலனார்
கோவிலனார் தம்முடைய குணமுள்ள தூதனையா
அவ்விடத்தில் நானிருந்து இவ்விடம் வந்தேனையா
ஓலையைக் கைகொடுத்து உத்தமனும் விலகிநின்றான்
மாநாய்கன் வாங்கி வகையுடனே வாசித்தான்
அவ்வோலை தன்னிலுள்ள அதிசயத்தைத் தான்பார்த்து
கோவிலனார் கைநாட்டைக் கொற்றவனுந் தான்பார்த்து
கண்ணிலே வொற்றிக்கொண்டு கட்டழகனேதுசொல்வான்
மாதகி தன்னிடத்தில் வருத்தம்வந்து நேர்ந்ததென்று
வந்ததொரு ஓலைதன்னை மன்னவனார் தாம்பார்த்து

## கோவலன் தன்பணத்தையெல்லாம் மாதகிக்களித்தல்.

அப்போ-கப்பலின் மாலுமியைக் கடுக வரவழைத்து
பன்னிரண்டு கப்பல்பணம் பாங்காய்ப் பயணமென்று
படவி லரிசியென்ன பட்டணத்து மாலையென்ன
சோங்கு மிளகுஎன்ன சொர்ணகப்ப லேலமது
இத்தனையுந் தான்கூட்டி இன்ப முடனனுப்ப
கப்பலுக்குப் பாய்கட்டிக் கடுக வருகுதுபார்
திருக்கடையூர் தேடியே தீவிரமா வருகுதங்கே
அங்கே-நங்கூரந் தான்போட்டு நலமாய்த் திருக்கடையூர்
லாங்கு படவேறி நலமாக வந்ததங்கே
மன்மத வடிவுடைய வர்த்தகனார் முன்னேவந்து
சிலைபோல் வடிவுடைய செட்டியார் முன்னேவந்து
அழகுடைய வர்த்தகனை ஆணழகன் கோவிலனை
கண்டுமல்லோ தெண்டனிட்டுக் கட்டழகன் கோவிலனை
பன்னிரண்டு கப்பல்பணம் பாங்காக வந்ததையா
படவி லரிசிகளும் பட்டணத்து மாலைகளும்
சோங்கு மிளகுமது சொர்ணகப்ப லேலமது
இத்தனையும் வந்ததென்று எடுத்துரைத்தான் மாலுமியும்
அப்போது கோவிலனும் ஆணழகன் தான்மகிழ்ந்து

தங்க மிதியடியாந் தனிக்குமிழ் ரத்தினமாம்
மிதியடியின் மேலேறி மிக்கமுத்துக் குடைபிடித்து
ரேவுத் துரைதனக்கு நேராக வந்துநின்று
படவு பணத்தையவர் பாங்கா யிறக்குமென்றார்
மாலுமியும் அப்படியே வந்து இறக்கினன்
கப்பலிலே மற்றபணங் கையிருப்புத் தானிருத்தி
இறக்கின பணமெடுத்து ஏந்திழையாள் வீடுவந்து
மாதகியைத் தானழைத்து வடிவழக னேதுசொல்வான்
ஆசைதந்த மாதகியே அன்புள்ள கண்மணியே
உனக்கென்ன வேண்டுமென்று உத்தமனர் கேட்கலுற்றார்
அப்போது மாதகியா ளரிவைபவ ளேதுசொல்வாள்
பன்னிரண்டு காணிநிலம் பர்த்தாவே வேண்டுமென்றாள்
அப்படியே நல்லதென்று ஆணழகன் கோவிலனும்
அந்தவூரி லேயிருக்கும் அழகான முன்சீப்பை
வாருமென்று தானழைத்து யர்த்தகரு மேதுசொல்வார்
பன்னிரண்டு காணிநிலம் பாங்காக வேண்டுமென்றார்
அப்படியே தான்கொடுத்தா ரானதொரு முனிசீப்பும்
மாதகிக்கு வேண்டுமென்று மன்னனந்தக் கோவிலனும்
ஏழடுக்கு மாளிகைதான் இன்பமுடன் கட்டுகிறான்
அரண்மனைக ளாஸ்தானம் அன்பாகக் கட்டுகிறான்
பூசைபண்ணு மண்டபமும் பொற்கொடிக்குக் கட்டினன்
பற்றி யுலாவுதற்குப் பன்னக சாலைகளாம்
சன்னலெல்லாம் பொன்னாலே தையலுட மாளிகைக்கு
காலெல்லாம் வயிரத்தூண் கதவெல்லாங் கண்ணாடி
வீதித் திரிந்துமவள் வீட்டுக்கு வந்தாலே
கைகால் கழுவுமிடம் கணக்கிடப் போகாது
சாளர வாசலுக்குச் சலவைக்கல் தான்புதைத்தார்
இத்தனையும் கட்டிவைத்தா ரிளங்கொடியாள் நாயகிக்கு
மாதகியைத் தானழைத்து வடிவழக னேதுசொல்வான்
என்னென்ன வேண்டும் இளங்கொடியே கேளுமென்றார்
வாய்திறந் தேதுசொல்வாள் மாதகியா ளப்போது

கணக்கு வழக்குமுண்டோ கணவருக் கும்நமக்கும்
என்ன கணக்கு இளங்கொடியே சொல்லுமென்றார்
காலைகடைச் செலவுகொள்ள கால்மரக்கால் பொன்வேணும்
உச்சிகடைச் செலவுகொள்ள ஒருமரக்கால் பொன்வேணும்
அந்திகடைச் செலவுகொள்ள அரைமரக்கால் பொன்வேணும்
பாக்குகொள்ள வென்தனுக்குப் பத்துலட்சம் பொன்வேணும்
வெற்றிலை வாங்குதற்கு வேணலட்சம் பொன்வேணும்
புகையிலை வாங்குதற்குப் பொன்கப்பல் பணம்வேணும்
சுண்ணும்பு வாங்குதற்குச் சொர்ணகப்பல் பொன்வேணும்
நித்தமொரு ஆயிரம்பொன் சத்தியமாய்த் தரவேணும்
பொழுதைக்கு ஆயிரம்பொன் பக்குவமாய்த் தரவேணும்
இப்படிக்குத் தரவேணும் இன்பமுள்ள நாயகரே
இன்னமென்ன வேணுமடி இளங்கொடியே சொல்லுமென
நட்டுவர்க்கு ஆயிரம்பொன் நலமாகத் தரவேணும்
மத்தளக் காரனுக்கு வளமாகத் தரவேணும் "
சுதிகாரப் பையனுக்குச் சொர்ணங் கொடுக்கவேணும்
என்தனுட மாதாவுக் கேழுலட்சந் தரவேணும்
இப்படிக்குச் சத்தியமா யெனக்குமே நீர்தாரும்
இன்னமென்ன வேணுமடி இளங்கொடியே கேளுமென்றார்
குத்துனி ரவிக்கைகளும் குசும்பாவின் சேலைகளும்
பட்டு ரவிக்கைகளும் பசும்பொன்னுற் சேலைகளும்
இரத்தினச் சடைபிலையும் இப்போது வேணுமென்றாள்
அப்படியே தான்கொடுத்தா னுணழகன் கோவிலனும்
கல்லிழைத்த கம்மலது கட்டழகன் செய்தான்காண்
கொப்புடனே வாளிகளும் கோர்வைமணித் தாழ்வடமும்
முத்திழைத்த மூக்குத்தி மோகன மாலைகளும்
எட்டு விரலுக்கு மிசைந்த கணையாழி
சுண்டு விரலுக்குச் சுழற்ற கணையாழி
வங்கி செய்தார் மயிலனையாள் மாதகிக்கு
காலாழி பீலாழி கண்டசர மார்பதக்கம்
சவுளிப் பதக்கங்களும் ஏந்திழைக்குச் செய்தார்காண்

இத்தனை யாபரணம் ஏந்திழைக்குச் செய்தார்காண்
இப்படிக்கு கோவிலனு ரிருக்கின்ற வேளையிலே
பன்னிரண்டு வருஷம் பைங்கிளியாள் வீடுதனில்
பட்டணத்தான் கோவிலனும் பாங்குடனே வீற்றிருந்தான்
ஆட்டமாடி வீடுவந்தால் அவளடியைத் தான்பிடிப்பான்
பாட்டுபாடி வீடுவந்தால் பக்கமெல்லாந் தான்பிடிப்பான்
வைத்தசாத முண்ணுவான் வழிநடந்த கால்பிடிப்பான்
தலைமாட்டில் வந்துநின்று தாழம்பூச் சூட்டிடுவான்
இப்படிக்குத் தானிருந்தான் ஏந்திழையாள் தன்னிடத்தில்
அவட்குத்-தம்பலக் காளாஞ்சி தலைமேல் சுமந்திருப்பான்
எச்சிற் படிக்கமதை யேந்தி யிருப்பானே
அமரர்கள் கோவிலுக்கு ஆடயிவள் போனுக்கால்
அவள்பின் னிவன்போவான் ஆணழகன் கோவிலனும்
இப்படிக்கு இஷ்டமா யிருந்தானே கோவிலனும்
பன்னிரண்டு வருஷமாகப் பைங்கொடியாள் தன்னிடத்தில்
இன்ப முடனுக இருந்தானே கோவிலனும்
பன்னிரண்டு தன்வருஷம் பக்ஷமுடன் தானிருந்தான்
அன்னிய பெண்ணிடத்தில் அன்புடனே தானிருந்தான்
மானுங் கலைபோலே கூடிவிளை யாடிடுவார்
குயிலு மயில்போலே கூடிவிளை யாடிடுவார்
சாரையும் சர்ப்பமும்போல் சேர்ந்துவிளை யாடுவார்
இஷ்டமுடன் தானிருந்தான் ஏந்திழையாள் தன்னிடத்தில்
இப்படிக்கு அங்கிருந்தான் இன்பமுடன் கோவிலனும்

## காவேரிப்பட்டணத்தில் கண்ணகியின் வரலாறு கூறுதல்.

பட்டணமாம் பட்டணமாம் காவிரிப்பூம் பட்டணமாம்
கஞ்சிகொண்டு களைபறிக்கும் காவிரிப்பூம் பட்டணமாம்
சோறுகொண்டு மதவடைக்கும் சொர்ணகிரி பட்டணத்தில்
காவிரிப்பூம் பட்டணத்தில் கண்ணகியாள் மாதினுக்கு
பன்னிரண்டு வயதாச்சு பைங்கொடியாள் கண்ணகிக்கு

நாளொரு மேனியாக நட்சத்திரம் போல்வளர்ந்தாள்
பொழுதொரு மேனியாகப் பொன்வண்டு போல்வளர்ந்தாள்
இப்படிக்குத் தான்வளர்ந்தாள் ஏந்திழை கண்ணகியும்
வளர்பிறை சந்திரன்போல் மங்கையருந் தான்வளர்ந்தாள்
தன்புத்தி தனக்குமே தையலாட்கு நேர்ந்ததுகாண்
அப்போது தாதியரை ஆரணங்கு தானழைத்து
கண்ணாடி கொண்டுவந்து கட்டழகி நாயகியாள்
தன்னழகைத் தான்பார்த்தாள் தாமக் கருங்குழலாள்
கொண்டையிலே பூவும் குதலையிலே மையழகும்
கையிலே கங்கணமும் கழுத்திலே தாலியதும்
இடையிலே கூறையும் இலங்குமுகம் மஞ்சளுமாய்
கண்ணின் திருவழகுங் கஸ்தூரிப் பொட்டழகும்
கஸ்தூரிப் பொட்டழகைக் கண்டுவிட்டாள் கண்ணகியாள்
என்தனுக்குத் தாலியது வந்தவகை சொல்லுமென்றாள்
ஆர்செய்த வேலையிது அரிவையரே சொல்லுமென்றாள்
கலியாணப் பந்தலிலே கட்டின தாலியது
இப்படிக்குக் கட்டினவ ரெங்கேயடி தாதியரே
மாமியார் வர்ணமாலை மயிலனையைக் கேட்டாக்கால்
அந்த வரலாற்றை அடியோடே தானுரைப்பாள்

## கண்ணகி மாமியாரைத் தன்புருஷனெங்கே யேன்று கேட்பது.

ஏறினாள் பல்லக்கு எடுத்தார்கள் தாதியர்கள்
மாமியார் வீடுதேடி வாறாளே மயிலனையாள்
மருமகள் வருகிறதை மாமியார் தான்பார்த்து
பகடையைத் தானும்விட்டுப் பைங்கொடி யெழுந்திருந்து
எதிர்கொண்டு வாறாளே ஏந்திழை வர்ணமாலை
மாமியைக் கண்டவுடன் மயிலனையுந் தெண்டனிட்டாள்
வாழ்த்தி யெடுத்தணைத்தாள் மருமகளை யப்பொழுது
ஆசனமுந் தான்போட்டா ளானதொரு மருமகட்கு
ஆசனத்தின் மேலே அமர்ந்தாளே கண்ணகியும்

எங்கேநீ வந்தாயென்று இளங்கொடியும் கேட்டாளே
மாமி முகம்பார்த்து மயிலனையு மேதுசொல்வாள்
மாலை தரித்ததொரு மணவாள னெங்கேயென்றாள்
தாலி தரித்ததொரு தனஞ்சயனு ரெங்கேயென்றாள்
காசுக்கடை விற்கின்ற கட்டழக ரெங்கேயென்றாள்
எவ்விடத்தில் காசுக்கடை எனக்கறியச் சொல்லுமென்றாள்
காசுக்கடை பக்கத்திலே வேசி கடையுமொன்று
வேசி கடைவீட்டில் வீற்றிருப்பா ருன்புருஷன்
எத்தனை நாளாச்சு என்புருஷன் வீடுவந்து
பன்னிரண்டு வருஷமாச்சு பைங்கிளியே வீடுவந்து
திருக்கடையூர் பட்டணத்தில் தெய்வரம்பை மாதகியாள்
அவள்வசத்தி லிருக்கின்றா ராணழக ருன்புருஷன்
அவரை யழையாமல் போனதென்ன அத்தையரே
வேசியுடன் போனவரை வீட்டுக்கு நாமழைத்தால்
நம்மொத்த வர்த்தகர்கள் நம்மை மதியார்கள்
ஆகையி னாலேநாங்கள் அழைக்கவில்லை மங்கையரே
உன்னாலே யானுக்கா லழையுமென்றா ளுத்தமியும்
அப்படியே நல்லதென்று அரிவையவள் தானெழுந்தாள்
தன்னுடைய மாளிகைக்குத் தையலவள் வந்துநின்று

## கண்ணகி தன்புருஷனுக்கு ஓலையெழுதி அனுப்புதல்.

தாளிப் பனையோலை தலைபக்கங் காம்பரிந்து
ஈழப் பனையோலை இருபக்கங் காம்பரிந்து
கணபதியைத் தானினைந்து கையிலெழுத் தாணிகொண்டு
ஐந்து வயதுதனி லறியாத நாளையிலே
மாலையிட்டு மூலைவைத்து மாதகியாள் வீடுசேர்ந்து
தாலிகட்டி மூலைவைத்து தாசிவீடு போய்நுழைந்து
பன்னிரண்டு தன்வருஷம் பரத்தையர் வீடுவந்து
மாலையிட்ட தேவிநான் மாண்டு மடிகிறேனே
தொண்டையிலே சீவன் தொடுக்கிட்டுப் போகுதுகாண்
உற்றார் பெற்றார்களும் பொன்னுரைத்துமே நாவிலிட்டார்

அப்படியும் போகவில்லை அடியாளின் இன்னுயிர்தான்
கல்லென்று னுங்கணவன் புல்லென்று னும்புருஷன்
உம்முடைய கையாலே துளசிதீர்த்தம் விட்டாலே
என்னுடைய சீவனது இறந்து மடிந்துவிடும்
கட்டின தாலியதைக் கையாலே வாங்கிக்கொண்டு
உற்றொருமை செய்துவிட்டு உத்தமரே போய்வாரும்
நீர்-வருமளவு மென்தனுயிர் மன்னவரே போகாது
ஓலைகண்ட நாழிகைக்கு வரவேண்டு முத்தமரே
என்றுசொல்லி யோலை எழுதினாள் கண்ணகியும்
செந்திரிக்கை தான்போட்டுத் தலைப்புறத்தில் சுட்டாளாம்
தாதிகளைத் தானழைத்து ஓலையைக் கைக்கொடுத்தாள்
திருக்கடையூர் பட்டணத்தில் தீவிரமாய் நீங்களும்போய்
மாதகிபை யறியாமல் வடிவழகர் தம்கையில்
ஓலையைக் கைக்கொடுத்து உத்தமனார் கோவிலரை
பல்லக்கி லேற்றிக்கொண்டு பாங்கியரே வாருமென்றாள்
காடு செடிதாண்டி கடுகவே வாரார்கள்
சில்லென்ற காடுஞ் செடியும் வனந்தாண்டி
புல்லென்ற காடும் புலிகள் வனந்தாண்டி
வனமாய் வனந்தாண்டி வாரார்கள் தாதியர்கள்
சித்ரமுகச் சாவடியில் தேன்மொழிமார் வந்திறங்கி
பல்லக்கை விட்டிறங்கிப் பாங்கியர்கள் தாமிருந்தார்
அன்னேர வேளையிலே ஆணழகர் கோவிலரும்
சித்ரமுகச் சாவடிக்குக் கோவிலரும் வாருரே
பூசைகள் தாம்முடிக்கப் புண்ணியரும் வாருரே
எதாஸ்தானங் தேடி யிருந்தாரே கோவிலனார்
ஆற்று மணலெடுத்து ஆவிடையா ருண்டுபண்ணி
சேற்று மணலெடுத்துச் சிவலிங்க முண்டுபண்ணி
தோட்டமது திறந்து தொன்னைதைத்துப் பூவெடுத்து
வாசற் படிதிறந்து வண்ணலட்சம் பூவெடுத்து
கொண்டுவந்த புட்பமதை குபுகுபென்று தான்சொரிந்து
வாரிவந்த நல்லபுட்பம் மலைபோலே தான்சொரிந்து

அட்டாளுஞ் சொக்கரையும் அங்கயற்கண் ணம்மனேயும்
அன்பாக வேமனதில் ஆணழகர் தாம்நினேந்து
கண்ணிரண்டு மூடிக்கொண்டு கையிரண்டு மேந்திக்கொண்டு
சிவசிவா வென்றுசொல்லிச் செயகண்டி தானடித்தார்

## கண்ணகியின் ஓலையைக் கோவிலனுர் காணுதல்.

செயகண்டி தானடிக்கத் தேன்மொழியா ளோடிவந்து
பூசையிலே தானிருக்கும் புண்ணியனுர் கைதனிலே
ஓலேச்சுருளே யந்த உத்தமியாள் தான்கொடுத்தாள்
ஓலேயைத் தான்வாங்கி யுத்தமரும் வாசித்தார்
கண்ணகி கைநாட்டைக் கட்டழகர் கண்டாரே
கொம்பனேயாள் கைநாட்டைக் கோவிலருங் கண்டாரே
வரைந்திருந்த ஓலேயிலே வக்கணேகள் தானறிந்து
சிவசிவா வென்றுசொல்லித் திருச்செவியில் கையைவைத்து
அரகரா வென்றுசொல்லி அவர்செவியில் கையைவைத்து
இப்படிக்கு நேரிட்டதோ ஏந்திழையே யுன்தனக்கு
ஈஸ்வரனுர் தன்செயலுக் கென்னதான் செய்வேனென்று
தாதிகளேத் தாமிருத்தி தனஞ்சயனுர் கோவிலரும்
மாதகியாள் தன்னிடத்தில் விடைபெற்று வாறேனென்று
தலேமேலே கையைவைத்துத் தானழுது வாருராம்
என்னசொல்லி யழுதுவாரு ரின்பமுள்ள கோவிலரும்
ஐந்து வயதிலே அறியாத நாளேயிலே
மூன்று பிராயத்திலே முலேகுடிக்கும் நாளேயிலே
மடிமே லெடுத்துவைத்து மாங்கனியைக் கைக்கொடுத்து
மாலேயிட்டு வைத்துநான் மாதகியாள் வீடுவந்தேன்
கூறையிட்டுத் தனியேவைத்து கூத்தியார் வீடுவந்தேன்
மாலேயிட்ட தேவியவள் மாண்டு மடியலாச்சே
உன்னுலே என்னசுகம் உத்தமியே நான்கண்டேன்
மாலேயிட்ட தல்லாது மற்றொரு சுகமறியேன்
வீணுக்குத் தாலிகட்டி விருதாவாய் விட்டுவந்தேன்
ஆரைச் சதமென்பேன் அன்னியரைத் தஞ்சமென்பேன்

நம்பி யிருந்தேனே நட்டாற்றில் விட்டாளே
என்று-தலைமேலே கையைவைத்துத் தனஞ்சயரும் வாருரே
மாதகியாள் வீடுதேடி வாருரே கோவிலனூர்
கூட்டமாய்க் காற்றடித்தால் கொம்போடே கொம்பசையும்
தனிப்புறமாய்க் காற்றடித்துத் தயங்கிப் புலம்புறேனே
என்று-முத்துப்போல் கண்ணீரை முகமெல்லாஞ் சோரவிட்டார்
பவளம்போல் கண்ணீரைப் பக்கமெல்லாஞ் சோரவிட்டார்
இப்படிக்குத் தானழுது ஏந்திழைபாள் முன்னேவந்து
முன்கட்டு வாசலிலே முடிமன்னர் வந்துநின்று
மாதகியைக் கண்டு வடிவழகர் நிற்கையிலே
அழுதகண்ணுஞ் சிந்தையுமா யாணழகன் நிற்கலுமே
அப்போது மாதகியா ளன்பாகத் தான்பார்த்து
ஆரடித்தார் ஏனழுதாய் அழுதகண்ணும் நீர்தளும்ப
அடித்தவரைச் சொல்லுமென்று ஆரணங்கு தான்கேட்க

## கோவிலர் பெண்சாதியிடம்போக மாதகியைச் செலவு கேட்குதல்.

அப்போது கோவிலரும் அரிவைபவட் கேதுசொல்வார்
ஆரு மடிக்கவில்லை அன்னியருந் தீண்டவில்லை
ஐந்து பிராயத்திலே அறியாத நாளையிலே
கொஞ்ச வயதிலே கொடிதான நாளையிலேதான்
மடிமே லெடுத்துவைத்து மாங்கனியைக் கைக்கொடுத்து
மாலை தரித்ததேவி மங்கைபரு மாண்டாளென்று
கூறை தரித்ததேவி கொம்பனையு மாண்டாளென்று
பத்தினியு மாண்டாளென்று பட்டணத்துத் தாதிவந்தாள்
உத்தமியும் மாண்டாளென்று ஓலைகொண்டு தாதிவந்தாள்
மாண்டுபோன கண்ணகியாள் மதிமுகத்தைப் பார்க்கவேண்டும்
செத்துப்போன கண்ணகியாள் திருமுகத்தைப் பார்க்கவேண்டும்
வாழ்வுக் குதவாவிட்டால் சாவுக் குதவவேண்டும்
நன்மைக் குதவாவிட்டால் தின்மைக் குதவவேண்டும்
இன்றேல்-என்னொத்த வர்த்தகர்கள் என்னை மதியார்கள்

சரியொத்த வர்த்தகர்கள் சற்றும் மதியார்கள்
ஊருமட்டும் போய்வாறேன் ஒருவார்த்தை சொல்லுமென்றார்
நாடுமட்டும் போய்வாறேன் நல்வாக்கு சொல்லவேணும்
முத்தான வாய்திறந்து உத்தாரஞ் சொல்லும்பெண்ணே
என்ன-அப்போது மாதகியா ளாரணங்கு மேதுசொல்வாள்
என்னிலுந் தானழகோ ஏதுங்கெட்ட கண்ணகியாள்
கூத்தியார் நானிருக்கக் கொண்டவள்மே லாசையென்ன
வேசியவள் நானிருக்க விரல்கொடுத்தா ளாசையென்ன
தாசியவள் நானிருக்கத் தாலியுள்ளா ளாசையென்ன
என்னிலுந் தானழகோ ஏதுங்கெட்ட கண்ணகியாள்
மறந்துவிடு மறந்துவிடு மாலையிட்டாள் தன்னுசை
போட்டு மறந்துவிடு பொற்கொடியாள் தன்னுசை
பன்னிரண்டு தன்வருஷம் பஞ்சணைமேல் நாமிருந்தோம்
கூடிக் குலாவிக்கொண்டு கொற்றவனே நாமிருந்தோம்
சாரையுஞ் சர்ப்பமும்போல் சீராய்விளை யாடிருந்தோம்
குயிலும் மயிலும்போலக் களித்துவிளை யாடிருந்தோம்
மானுங் கலைபோல மகிழ்ந்துவிளை யாடிருந்தோம்
எள்ளுக்கு ளெண்ணெய்போல் என்னாளும் வாழ்ந்திருந்தோம்
பாலுக்குள் வெண்ணெயைப்போல் பரவியே நாமிருந்தோம்
எள்ளுவேறே எண்ணெய்வேறே பிரியடித்தாள் மாபாவி
விட்டுதோ வுன்னுசை விளாம்பழத்து ஓடதுபோல்
வேண்டுமென்ற நாளையிலே வேப்பங் கசப்பானேன்
சட்டிசுட்ட தென்றுகையை விட்டுநீர் போறேனென்றீர்
ஆரைச் சதமென்பேன் அன்னியரைத் தஞ்சமென்பேன்
நம்பி யிருந்தேனே நட்டாற்றில் விட்டீரே
இப்போ-ஊருக்குப் போறேனென் றுத்தமரே சொன்னீரே
வாய்கூசா தெனைக்கேட்க வந்ததோ வும்தம்மனம்
என்னநான் குற்றஞ்செய்தேன் என்னைவிட்டு நீர்போறீர்
என்னைவிட்டு நீர்போக என்னமனம் தோன்றுதுகாண்
ஆசையை நீத்துவிட்டு அம்பலத்தில் விட்டீரே
என்று-முத்துப்போல் கண்ணீரை முகமெல்லாஞ் சோரவிட்டாள்

தாரைதாரை யாகவேதான் சோரவிட்டுத் தானழுதாள்
மானழுத பாவனைப்போல் தானழுது வாடுகிறாள்
அப்போது கோவிலனும் ஆணழகன் தானெழுந்து
முன்தானை கொண்டு முகமெல்லாந் தான்துடைத்து
உன்னைவிட்டு நான்பிரியே னொருநாழி யானாலும்
கொண்டவளை நான்பார்த்துக் கொம்பனையே வாறேனடி
உற்றொருமை செய்துவிட்டு ஒருநொடியில் வாறேனடி
கட்டிய தாலிதன்னைக் கைமேலே வாங்கிக்கொண்டு
வைகையிலே ஸ்நானம்பண்ணி வருவேண்டி உன்மனைக்கு
ஒன்றுக்கு மஞ்சாதே ஒளியுள்ள கண்மணியே
சந்தோஷ மாகவேதான் தையலே அனுப்பிவைத்தால்
காவிரிப்பூம் பட்டணத்தில் கரைதுறைக்குப் போய்வாறேன்
என்றுசொல்லி கோவிலனு ரெடுத்துரைத்தா ரந்நேரம்

## மாதகி கோவிலரை உன்னைப்போல் பதுமைசெய்து வைத்துப் போய்வாருமென்று சொன்னது.

அப்போது மாதகியாள் அரிவையவ ளேதுசொல்வாள்
உன்னைப்போ லேபதுமை யொன்றுநீர் செய்துவிட்டு
சிறுபதுமை செய்துவைத்து செட்டிப்பிள்ளை போய்வாரும்
மணிப்பதுமை செய்துவைத்து மன்னவரே போய்வாரும்
என்ன-அப்போது கோவிலனுர் ஆணழக ரேதுசொல்வார்
சித்ரமுகச் சாவடியில் தேன்மொழியே நானும்போய்
களஞ்சியத்துத் திரவியத்தைக் கடுகெனவே நானரித்து
பதுமையொன்று செய்துவைத்துப் பாவையே போய்வாறேன்
என்று-களஞ்சியத்தைத் தேடியே கட்டழகர் வாறுரே
பொன்னு மிதியடியைப் போட்டு மிகநடந்து
திருநெல்வே லிச்சோமன் சீராகத் தாமுடுத்தி
காங்கு உருமாலை கள்ளர்கட்டு முண்டாசு
சேலத் துருமாலை சேர்த்திறுக்கிக் கட்டினுரே
சவுளிக் கடுக்கனது சன்னல்பின்னல் தாழ்வடமும்
ஒண்டிக்கல் முருகதுவும் ஒருகாதிற் சோதிமின்ன

முப்புரி நூலுமது மூன்றுலட்சம் பொன்பெறுமே
செக்கச் சிவந்தவர்காண் செங்கீரைத் தண்டழகர்
மாங்காய் முடியழகர் மாதுளம்பூ மேனியனர்
தானு மழகுடையார் தக்கோலந் தின்றவர்காண்
ஆணு லழகனவர் அன்புள்ள வர்த்தகர்காண்
அட்டாளுஞ் சொக்கரைப்போ லாணழகர் வாருரே
மாதகிக்குப் பதுமைசெய்ய வாருராங் கோவிலனர்
பஞ்சாயத்தார் வீடுதேடிப் பட்டணத்தார் வாருராம்
குட்டியென்ற ஆசாரி குருபுத்திரர் கம்மாளர்
சுப்பனென்னு மாசாரி சொகுசுள்ள கம்மாளர்
அண்ணன்தம்பி யேழுபே ரானதொரு கம்மாளர்
பஞ்சாயத்தார் வீடுதேடிப் பட்டணத்தார் வாருராம்
அப்போது பஞ்சாயத்தா ரண்ணன்தம்பி யேழுபேரும்
மதுரைவாழ் சொக்கரைப்போல் மகாதேவர் வருகிறதை
பார்த்தவர்க ளேழுபேரும் பண்பாக அப்போது
நாம்-கேட்ட வரந்தருவார் கீர்த்தியுள்ள சொக்கரென்று
தோட்ட மதுதிறந்து தொன்னைதைத்துப் பூவெடுத்து
வாசற் படிதிறந்து வண்ணலட்சம் பூவெடுத்து
ஓடுகிற கங்கையிலே ஒருசெம்பு ஜலமெடுத்து
பாதமது துடைக்கப் பட்டாடை தாமெடுத்து
ஓட்டம் பெருநடையா யோடிவந்தார் பஞ்சாயத்தார்
கொண்டுவந்த செம்புஜலம் கோவிலனர் தாளூற்றி
பாதமது துலங்கப் பட்டா லடிதுவட்டி
கொண்டுவந்த புட்பமதைக் குபுகுபென்று தான்சொரிந்து
வாரிவந்த புட்பமெல்லாம் மலரடியிற் றன்சொரிந்து
முக்கா லடிவணங்கி மூவொருகால் தெண்டனிட்டு
தெண்டனிட்ட பஞ்சாளரைக் கண்டந்தக் கோவிலனர்
சிவசிவா வென்றுசொல்லித் திருச்செவியில் கையைவைத்து
அரகரா வென்றுசொல்லி அருஞ்செவியில் கையைவைத்து
என்னைப் பணிந்தவகை ஏதுவகை சொல்லுமென்றர்
அட்டாளுஞ் சொக்கரென்று அடிபணிந்தோம் நாங்களுமை

கேட்டவரந் தருவீரென்று கீர்த்தியுடன் தான்பணிந்தோம்
சொக்கரல்ல சொக்கரல்ல சொர்ணகிரி செட்டிப்பிள்ளை
பதுமையு மெந்தனைப்போற் பண்ணவந்தே னுங்களிடம்
மாதவிக்குப் பதுமைசெய்ய வடிவழகன் வந்தேனென்றார்
அது-உங்களா லாகுமோ உத்தமரே சொல்லுமென்றார்
ஆகுமையா எங்களாலென் றழைத்துவந்தா ரரண்மனைக்கு
வட்டமணை போட்டார்கள் வடிவழகர் கோவிலர்க்கு

## கோவிலர் தம்மைப்போல் பதுமைசெய்யச் சொல்ல கம்மாளர் துரிதத்தில் தங்களால் முடியாதென்றது.

என்னைப்போற் பதுமையொன் றிப்போது செய்யவேண்டும்
எத்தனை நாளையிலே செய்து கொடுப்பீரென்றார்
எட்டுநா ளொருவாரம் இருந்தீரே யாமானால்
உம்மைப்போ லேபதுமை உத்தமரே செய்வோமென்றார்
ஒருநாழிக் குள்ளாக செய்யவேணு மென்றுரைத்தார்
எங்களா லாகாதென் றியம்பினார் பஞ்சாளர்
என்னைப்போற் கருவுகட்டித் தாரீரோ என்றுகேட்டார்
மெழுகாற் கருவுகட்டி வேந்தனே செய்யவேண்டும்
அதிலே பழுதானு லாகாது கோவிலரே
மறுபடியு முருக்கியல்லோ மன்னவரே செய்யவேண்டும்
எவ்வளவு வேலைகொள்ளு மெங்களுக் கென்றுசொன்னார்
அரைநாழிக் குள்ளேசெய்ய ஆகாது மன்னவரே
அப்போது கோவிலனு ராணழக ரேதுசொல்வார்
பொன்னை யுருக்கியல்லோ புண்ணியரே தாருமென்றார்
அப்படியே நல்லதென்று அவர்களுஞ் சம்மதித்தார்
மூசையிலே போட்டு உருக்கினார் பொன்தனையும்
அப்போது கோவிலனு ராணழக ரென்னசெய்தார்

## கோவிலர்க்குப் பொற்பதுமை அமைந்தது.

புத்துமண்ணும் கொண்டுவந்து புண்ணியனு ரன்னேரம்
அதைக்கருக்கல் போலே ஆணழகர் செய்தாராம்

சுற்றித் திரைவளைத்தார் சொர்ணங்கொண்டு வாருமென்றார்
அப்போ-ஆரை நினைக்கிறா ளவற்ற சிந்தையிலே
பத்தாத பத்தினியே பழுதுபடா ரத்தினமே
குற்றமற்ற ரத்தினமே கோவிலிங்கி சீர்மகளே
நீ-பத்தினியு மெய்யானால் பதுமை யமையவேண்டும்
பத்தினியைத் தானினைத்து பஞ்சலோகந் தான்கவிழ்த்தார்
ஓடி யுருகுதங்கே உள்ளுருகிப் பாயுதுபார்
ஐந்தெழுத்தும் பாவனையும் ஆணழகன் கோவிலன்போல்
பட்டணத்தார் போலாகப் பதுமை யமைந்ததங்கே
பஞ்சாள ரையழைத்துப் பட்டணத்தா ரேதுசொல்வார்
கருவுகொண்டு வாங்களென்று கட்டழகர் தாமுரைத்தார்
ரவைசல்லா தான்மூடி நலமாகக் கொண்டுவந்தார்
குளத்தங் கரைக்கதனை கொண்டுவந்தார் பஞ்சாளர்
கருவதனைத் தட்டினார்கள் கம்மாள ரப்பொழுது
அழகு துலங்குறது, ஆனந்தங் கொஞ்சுறது
கண்ணழகுங் கையழகுங் கண்டார்கள் பஞ்சாளர்
நம்மாலே யாகுமோ நலமாகச் செய்வதற்கு
என்றுசொல்லிப் பஞ்சாளர் ஏழுபேரு மொன்றாக
பதுமையைக் கொண்டுவந்து பட்டணத்தார் கைக்கொடுத்தார்
பதுமை தனையெடுத்துப் பட்டணத்தார் வாறாரே
மாதகியாள் அந்தப்புரம் வாறாரே கோவிலனார்
தலைக்கடை வாசலிலே தனஞ்சயனார் வந்துநின்றார்
பதுமையை யங்குவைத்துப் பட்டணத்தா ருள்நுழைந்தார்
மாதகியாள் முன்னேவந்து வடிவழக னேதுசொல்வான்
பொழுதேறிப் போகுதடி போகவேணுங் கண்மணியே
நாளேறிப் போகுதடி நடக்கவேணும் பெண்ணணங்கே
பொற்கொடியே மாதகியே போகவிடை தாவென்றார்
அப்போது மாதகியா ளாரணங் கென்னசொல்வாள்
பதுமைகொண்டு வந்தீரானால் பட்டணம் போய்வரலாம்
உம்பதுமை செய்துவைத்தா லூருக் கனுப்பிவைப்பேன்
என்ன-அப்போது கோவிலனார் ஆணழக ரேதுசொல்வார்

தலைக்கடையில் வைத்தேனடி தையலரே பாருமென்றார்
ஓட்டம் பெருநடையா யோடிவந்து பாருமென்றார்
தலைக்கடையி லோடிவந்து தையலவள் பார்க்கலுற்றாள்
மாணிக்கம் போலாக மணிப்பதுமை தான்துலங்க
பதுமையின் றன்னழகைப் பார்த்தா ளிளங்கொடியாள்
சந்தோஷ மாகவேதான் சரீரங்கள் பூரித்தாள்
கோவிலனார் முன்னேவந்து கொம்பனையு மேதுசொல்வாள்
பேசாத பொற்பதுமை பெண்ணரசி யேதுக்கென்றாள்
பதுமையைப் பேசவைத்தால் பட்டணமே போய்வரலாம்

## கோவிலன் பதுமையைப் பேசச்செய்தல்.

அப்போது கோவிலனு ராணழக ரேதுசெய்தார்
புறக்கடைக் கோடிவந்தார் புண்ணியனார் கோவிலரும்
பச்சிலையைத் தான்கசக்கிப் பாங்காகத் தானெடுத்து
நெற்றிக்குத் திலதமிட்டு நேர்விழிக்கு மையெழுதி
கண்ணகியைத் தானினைத்தார் கட்டழக ரப்போது
கண்ணைத் திறக்குதுபார் கலகலென்று பேசுதுபார்
பொற்பதுமை சொல்லுறது பூவைபரைத் தான்பார்த்து
ஆசைதந்த மாதகியே அன்புக் கிசைந்தவளே
அடி-ஓட்டிவிடு ஓட்டிவிடு ஊரைவிட்டுக் காதவழி
இஞ்சிவிற்குஞ் செட்டிமகன் இனிதாய் நடப்பானோ
மஞ்சள்விற்குஞ் செட்டிமகன் மனதுபோல் நடப்பானோ
அண்ணன் வருமளவும் ஆளடிமை யுன்தனுக்கு
தமையன் வருமளவுந் தானடிமை யுன்தனுக்கு
என்றுசொல்லி பொற்பதுமை யிருக்கிற வேளையிலே

## பொற்பதுமை மாதகியை அடிப்பது.

வேந்தனந்த கோவிலற்கு விடைகொடுத் தனுப்பாததால்
வாய்திறந்து மாதகியும் வார்த்தையொன்றுஞ் சொல்லாததால்
அப்போது பொற்பதுமை ஆங்காரக் கோபமுடன்
ஜவளிப் பிரம்பெடுத்து ஜாடுதுபார் மாதகியை

கொத்துப் பிரம்பெடுத்துக் கொல்லுதுபார் மாதகியை
வர்ணப் பிரம்பெடுத்து மாறி யடிக்குதுபார்
எழுந்தா லொருகுத்தும் விழுந்தா லோருதையும்
குத்துக் குழக்குரத்தம் கொப்பளித்துத் தானுமிழ்ந்தாள்

## கோவிலரை ஊருக்குப் போய்வாருமென்று மாதகி யனுப்புதல்.

வர்த்தகனைத் தான்பார்த்து வடிவழகா போய்வாரும்
ஊருக்குப் போய்வாரும் உத்தமரே கோவிலரே
என்ன-அப்போது கோவிலனுர் அந்தப் புரந்தாண்டி
அந்தப் புரந்தாண்டி ஆணழகர் வாருரே
சித்ரமுகச் சாவடிக்குச் சீராக வாருரே
தாதியரைத் தாம்பார்த்து தனஞ்சயனுர் கோவிலரும்
நித்திரை போருரே நேரான கோவிலரும்
அப்போ தரிவையரும் அன்ன மருந்தவென்று
போசன மண்டபத்தே போய்ப்புகுந்தாள் மாதகியும்
பொற்றளிகை யுற்றனமும் புசித்து இருந்தாளே

## கண்ணகி கோவிலர் வராமையால் சாபமிடப் பதுமை யிறந்தது.

அப்போது கண்ணகியா ளாரணங் கேதுசெய்தாள்
அஞ்சனத்தைப் போட்டுமவ ளாராய்ந்து பார்க்கலுற்ருள்
மையுருக மையுருக மைபழகு தோணுகுது
அனுமாரு மங்கதரும் ஆரணங்கு முன்னேவந்தார்
மாதகிக்குப் பதுமைசெய்து வாருர்காண் கோவிலனுர்
என்றுசொல்லி அஞ்சனத்தி லின்பமுடன் தோற்றுகுது
அப்போது கண்ணகியா ளாரணங்கு என்னசெய்தாள்
கைமுறித்துச் சாபமிட்டாள் கட்டழகி மங்கையரும்
பத்தினியாள் சாபமிடப் பதுமைவா யடைத்ததங்கே
செத்து மடிந்தது சிவலோகஞ் சேர்ந்ததுகாண்
அப்போது மாதகியா ளாரணங்கு மோடிவந்து
பதுமையைத் தான்பார்த்து பாவை யிளங்கொடியாள்

செத்துக் கிடக்கிறதை தேன்மொழியாள் கண்டுவிட்டாள்
கோபம் பிறந்துமேதான் கொம்பனையாள் தானெழுந்து
கரகமென்று தான்சுழற்றிக் கல்லின்மே லேயடித்தாள்
அது-பொடியாகப் போச்சுது பொற்கொடியாள் முன்பாக
அப்போது மாதகியா ளாரணங்கு தானெழுந்தாள்
தாயாரந்த வசந்தமாலை தையல ருகில்வந்து
என்னடி மகளேயென்று இளங்கொடி கேட்கலுற்றாள்
பதுமையைச் செய்துவைத்துப் பட்டணத்தார் போனார்காண்
அவர்-போனதின் பிற்பாடு பொற்பதுமை யிறந்ததுகாண்
என்னைமோசம் பண்ணியவ ரேகினா ரென்னசெய்வேன்
என்று அழுகையிலே ஏதுசொல்வாள் மாதாவும்
அஞ்சாதே மகளேயென்று ஆரணங்கைத் தேற்றியபின்

## பதுமையிறக்கத் தாசி கோவிலரை ஓலையெழுதி வரவழைத்தல்.

தாளிப் பனையோலை தலைப்புறங் காம்பரிந்து
ஈழத்து ஓலையிலே இருபுறங் காம்பரிந்து
முத்துப் பதித்ததுபோல் மூன்றுவரி யெழுதுகிறாள்
என்னென்று ஓலையிலே எழுதுகிறாள் வசந்தமாலை
பதுமையும் மாதகியும் பஞ்சணை மேலிருந்தார்
சங்கிலி வழியாகச் சர்ப்ப மிறங்கிவந்து
பதுமையை விட்டுவிட்டுப் பாவையைக் கடித்ததுகாண்
மாண்டு மடிந்தாளே மாதகியாள் பாம்பாலே
எடுப்பாரு மில்லைகா ணேந்திழையாள் மாதகியை
ஓலைகண்ட நாழிகைக்கு உத்தமரே வரவேண்டும்
கடுக வரவேண்டுங் கட்டழகா கோவிலரே
காணாப் பிணமாகக் கட்டழகி தானிருக்க
என்னாலே யாகுமோ ஏந்திழையைத் தானெடுக்க
நீறு நெருப்பாக்கி நீர்போக வேண்டுமையா
என்றுசொல்லி ஓலையிலே எழுதினாள் வசந்தமாலை
தாதியர்க்குப் பல்லக்குத் தான்கொடுத்து ஏதுசொல்வாள்

கோவிலற்கு ஓலைச்சுருள் கொடுத்தழைத்து வாங்கவென்றாள்
வாயுவேக மனோவேகமாய் வாறார்கள் தாதியர்கள்
சித்ரமுகச் சாவடியிற் சேடியரும் வந்துநின்றார்
அப்போது கோவிலனா ராணழக ரேதுசெய்வார்
பல்லக்கின் மேலேறிப் பயணமிட்டுப் போகையிலே
அந்நேர வேளையிலே அரிவையர்கள் தாம்சூழ்ந்தார்

## கோவிலர் ஓலையைக்கண்டு மாதகி யிறந்தா ளென்று புலம்பி வருதல்.

பல்லக்கைத் தான்மறித்துப் பாவையர்க ளோலைதந்தார்
ஓலைச் சுருளையந்த உத்தமருந் தாம்பார்த்து
கதறி விழுந்தாரே கட்டழகர் கோவிலனார்
அடிபெண்ணே மாதகியே அரிவையேநீ மாண்டாயோ
சுகந்தந்த மாதகியே தோகையரே மாண்டாயோ
ஆரைச் சதமென்பேன் அன்னியரைத் தஞ்சமென்பேன்
எவரைச் சதமென்பேன் இனியாரைத் தஞ்சமென்பேன்
உன்னை-நம்பி யிருந்தேனே நட்டாற்றில் விட்டாயே
ஒருவரைப் பறிகொடுப்பா ருலகத்தி லுள்ளபடி
இருவரையும் பறிகொடுத்து ஏனாதி யானேனே
கூட்டமாய்க் காற்றடித்தால் கொத்தோடே கொம்பசையும்
தனிமரமாய்க் காற்றடித்துத் தவித்துப் புலம்புறேனே
கண்ணகியாள் மாண்டுநீ கணிகை யிருக்கொணாதோ
பத்தினியாள் மாண்டுநீ பரஸ்திரீ யிருக்கொணாதோ
உத்தமியாள் மாண்டுநீ ஒருத்தி யிருக்கொணாதோ
பரஸ்திரீ மாண் டாலுமென்தன் பத்னியிருக்கொணாதோ
இருவரையும் பறிகொடுத்து இலவுகாத்த கிளியாகி
தலைமேலே கையைவைத்துத் தானழுது கோவிலரும்
கண்ணகியாள் தாதியரைக் கட்டழகர் தாமழைத்து
ஐம்பது பொன்னையும் அடவாகத் தாம்கொடுத்து
பத்தாத பத்தினியே பழுதுபடா ரத்தினமே
குற்றமற்ற பெண்மயிலே கோவிலிங்கி சீர்மகளே

உற்றுரிமை செய்யவென்று உத்தமன் நானும்வந்தேன்
வந்த விடந்தனிலே வழக்கொன்று உண்டாச்சு
வழக்குகளைப் பற்றறுத்து வருவேனு னுன்னிடத்தில்
என்று-தாதிகளைத் தாமனுப்பித் தனஞ்சயனுர் வாருரே
தாதியர்கள் போனபின்பு தையலரைத் தாம்தேடி
தலைமேலே கையைவைத்துத் தனஞ்சயனுர் வாருரே
ஆசைதந்த மாதகியே அரிவையரே மாண்டாயோ
சுகந்தந்த மாதகியே தோகையரே மாண்டாயோ
என்றைக்குக் காணுவேனுன் ஏந்திழையே உன்முகத்தை
என்றுசொல்லிக் கோவிலரும் ஏங்கி யழுதுவாருர்
மாதகியாள் அந்தப்புரம் வந்துநின்ருர் கோவிலரும்
அப்போது மாதகியா ளாரணங் கேதுசெய்தாள்
உண்டு பசியாறி ஒருசெம்பு நீர்குடித்து
தாம்பூலந் தானருந்தி தைய லிளங்கொடியாள்
சப்ரகூட மஞ்சத்திலே தானிருந்தாள் மாதகியும்
அந்நேர வேளையிலே ஆணழகர் முன்னேவந்து
கானகத்திலே யனுப்பிக் கழுத்தறுக்க ஆளைவிட்டாய்
கறியுஞ்சாத மிலையிலிட்டு கழுத்தறுக்க எண்ணங்கொண்டாய்
என்றுசொல்லி கோவிலரும் ஏந்திழையைக் கேட்கலுற்ருர்
அப்போது மாதகியாள் அன்பா யெழுந்திருந்து

## கோவிலர் வந்தாரென்று மாதகி தன்தாயாரிடத்திற் சொல்ல அவரை விடாமல் பத்திரப்படுத் தென்று கிழவிசொல்ல மாதகி கோவிலரை இம்சைப்படுத்தல்.

வசந்தமாலை முன்பாக மயிலனையாள் வந்துநின்று
கோவிலன் செட்டியார் கொழுநரும் வந்தாரம்மா
என்ன-அப்போது வசந்தமாலை அரிவையருக் கென்னசொல்வாள்
தாசிவீடு வந்தவர்கள் தலைதப்பிப் போகிறதோ
வேசிவீடு வந்தவரை வீட்டுக் கனுப்புவதோ
பாதாளக் குழிதோண்டி பக்குவப் படுத்தவேண்டும்

ஈர்மண் வெட்டி யிறுகப் புதைக்கவேண்டும்
என்றந்த வசந்தமாலை யெடுத்துரைக்க மாதகியும்
என்னதான் செய்கிறது இப்போது சொல்லுமென்றாள்
அப்போது வசந்தமாலை அரிவையவட் கேதுரைப்பாள்
ஆபர ணங்களுண்டோ அரிவையரே சொல்லுமென்றாள்
ஆரம்மா ஆபரணம் அவரிட மிருக்குதென்றாள்
தட்டிப் பறியுமென்றாள் தையலந்த வசந்தமாலை
அவ்வார்த்தை தான்கேட்டு ஆரணங்கு ஓடிவந்து
செட்டியார் முன்பாகத் தேன்மொழியாள் வந்துநின்று
என்கணவா வர்த்தகரே யெனக்கிசைந்த புண்ணியரே
பார்த்தாப்போல் பார்த்திருக்கப் பாக்குப்பை தாருமென்றாள்
இந்தாடி யென்றுசொல்லி எடுத்துமெள்ளக் கைகொடுத்தார்
கண்டாப்போல் கண்டிருக்கக் கண்டகத்தைத் தாருமென்றாள்
இதுவோவெகு பாரமென எடுத்துமெள்ளக் கைகொடுத்தார்
கணவரைப்போற் பார்த்திருக்கக் கணையாழி தாருமென்றாள்
உம்மைப்போல் பார்த்திருக்க உருமாலை தாருமென்றாள்
அப்படியே தாம்கொடுத்தா ராணழகர் கோவிலனர்
மேலிருக்கும் அங்கவஸ்திரம் மெல்லியர்க்குத் தாருமென்றாள்
கையிலுள்ள குட்டைதனைக் கட்டழகா தாருமென்றாள்
அத்தனையுந் தான்கழற்றி ஆணழகர் கைகொடுத்தார்
உம்மைப்போல் பார்த்திருக்க உத்தமரே யென்தனுக்கு
தாடியும் மீசையுந் தரவேண்டு மென்றுசொன்னாள்
கத்தரிக்கோல் கொண்டுவந்து கத்தரித்துக் கைகொடுத்தார்
அத்தையும் வாங்கின ளரிவையந்த மாதகியாள்
தலையிலுள்ள குடுமியைத் தரவேண்டு மென்றுசொன்னாள்
அதனையுங் கத்தரித்து ஆணழகர் தாம்கொடுத்தார்
அரைஞாண் நீர்ச்சீலை ஆணழகா தாருமென்றாள்
அத்தையுங் கத்தரித்து ஆணழகர் தாம்கொடுத்தார்
உம்தம் வடிவழகை என்தனுக்குத் தாருமென்றாள்
எப்படிக்கு நான் கொடுப்பே னிளங்கொடியே என்னழகை
சூரிகத்தி கொண்டுவந்து சுரண்டினாள் பல்மாசு

பாறையின்மேல் படுக்கவைத்துப் பட்டணத்தார் கோவிலரை
கம்பளியால் மூடினள் கட்டழகி மாதகியாள்
பிடரியிற் கைகொடுத்துப் பிடித்திழுத் தழுத்தினளே
நாவற் பழம்போலே நலமாய்க் கறுத்தங்கே
அங்கமது துடித்து ஆவியெல்லாம் தான்பதறி
வேர்வை வழிந்தது மேனியெல்லாம் வர்த்தகர்க்கு
அத்தான் தீர்த்தமென்று அன்பாகத் தானெடுத்து
கெண்டியிலே வைத்தாளாங் கிளிமொழியாள் மாதகியும்
அப்போது கோவிலர்க்கு அழகுமிகச் சிந்திடுமாம்
திருப்பதி திம்மனைப்போல் நின்றாராங் கோவிலனார்

## மாதகி கோவிலர் அழகுமுதல் பறித்து இவரை என்னசெய்கிறதென்று தாயைக்கேட்க தாய் கிணற்றிற் றள்ளென்று சொன்னது.

அப்போது மாதகியா ளாரணங்கு வாறாளே
வசந்தமாலை முன்பாக வந்துநின்றாள் மாதகியாள்
எல்லாம் பறித்துக்கொண்டே னிளங்கொடியே தாயாரே
திருப்பதி திம்மனைப்போல் நின்றாண்டி கோவிலனும்
அவனை-இனியென்ன செய்கிறது ஏந்திழையே தாயாரே
சிங்கமுகக் கேணியிலே தேன்மொழியே தள்ளுமென்றாள்
அப்படியே நல்லதென்று அரிவையருஞ் சம்மதித்து
கோவிலனார் முன்பாகக் கொம்பனையு மோடிவந்து
முடிமன்னா வடிவழகா முத்துவிற்கும் வர்த்தகரே
கலைமான் சிலைபழகா கப்பலோட்டும் வியாபாரி
எக்காலஞ் சென்றிடுமோ யென்கணவா யுனைக்காண
என்னைவிட்டு நீபிரிய எப்படிக்குத் தான்துணிந்தீர்
சிங்கமுகக் கேணியிலே சென்றுஜலம் மொண்டுவந்தால்
அத்தானுட தீர்த்தமென்று அரிவைநான் பார்த்திருப்பேன்
ஆணழகர் கோவிலரும் அப்படியே யாகுதென
தாம்புக்கயிறுஞ் செம்புந் தையலவள் தானெடுத்து
சிங்கமுகக் கேணியரு கங்குஅவள் கொண்டுவந்தாள்

ஆறுபது பாகமெனும் ஆழமுள்ள கிணறதற்கு
முப்பது பாகக்கயிறு மொய்குழலால் தான்கொடுத்தாள்
ஜலந்தன்னை மொள்ளுமெனத் தையலவள் கைகொடுத்தாள்

## மாதகியாள் கோவிலரைக் கிணற்றில் தள்ளுதல்.

அப்போது கோவிலரும் அந்தச்செம்பில் கயிறணிந்து
கயிறை நழுகவிட்டார் கட்டழகர் கோவிலரும்
எட்டவில்லை யேகயிறு என்னசெய்வேன் மாதகியே
என்ன-இறங்கிமொள்ளு மென்கணவா எனக்கிசைந்த புண்ணியரே
நாலுபடி கீழிறங்கி நலமாக மொள்ளுமென்றாள்
இறங்கிஜல மொள்ளலுற்றா ரின்பமுள்ள கோவிலரும்
அவர்-பிடரியில் கைகொடுத்துப் பின்னாலே தள்ளிவிட்டாள்
சிங்கமுகக் கேணியிலே திட்டென்று விழுந்துவிட்டார்
பாறையதன் மேல்மூடிப் பாவையரும் வந்துவிட்டாள்
அப்போது கோவிலரும் ஆணழக ரேதுசொல்வார்
பெண்ணே கண்ணே மாதகியே பெண்ணரசே நாயகமே
ஆசைதந்த மாதகியே அரிவையரே மாண்டாயோ
செத்தாலுஞ் சேதமில்லை தேன்மொழியே மாண்டாயோ
மாதகியைத் தானினைந்து வாடிப் புலம்புகிறார்

## கிணற்றில் தள்ளிய கோவிலர் பிழைத்து மறுபடியும் மாதகியிடம் வருதல்.

அப்போது கங்கை அமிழ்ந்ததே பூமியிலே
அவர்-ஆவிபோகும் வேளையிலே யாரை நினைக்கலுற்றார்
பத்தாத பத்தினியே பழுதுபடா ரத்தினமே
குற்றமற்ற மேல்ரதியே கோவிலிங்கி சீர்மகளே
பத்தாநான் மாளுகிறேன் பைங்கொடிக்கு யாருரைப்பார்
உன்புருஷன் மாளுகிறே னுன்தனுக்கு யாருரைப்பார்
நீ-பத்தினியு மெய்யானால் பக்கத்துணை வாருமென்றார்
பத்தினியைத் தானினைக்கப் பார்த்துவிட்டாள் கங்கையவள்
அரைக்கிணறா யிருந்தஜலம் முழுகிணறாய்ப் பொங்கினதே

அப்போது கோவிலரும் ஆணழகர் தாமெழுந்து
மாதகியாள் காவடியை மன்னவனுங் கண்டுவிட்டான்
காலடியின் சேறதனைக் கட்டழகன் தான்குழைத்து
நெற்றித் திலதமாக இட்டாரே புண்ணியனும்
மாதகியாள் வீடுதேடி வாருரே கோவிலரும்
மாதகியாள் முன்னேவந்து வடிவழக ரென்னசொல்வார்
சிங்கமுகக் கேணியிலே தேன்மொழியே யெனைத்தள்ளி
மனந்துணிந்து வந்தாயே மாதகியே யென்றுரைத்தார்
அவ்வார்த்தை தான்கேட்டு ஆரணங்கு மேதுரைப்பாள்
பணிக்கரை நான்தேடிப் பார்த்தழைக்கப் போனேனே
அவர்-நாளைக்கு வாரேமென்று நலமாகத் தானுரைத்தார்
இதுக்குள்ளே வந்தீரே என்னுடைய பாக்கியந்தான்
பஞ்சணை மேலாகப் பாங்குடனே குந்துமென்ருள்
அப்போது கோவிலனு ராணழக ரென்னசொல்வார்
பொழுதேறிப் போகுதே போகவேண்டுஞ் சொர்ணகிரி
நாளேறிப் போகுதடி நடக்கவேண்டும் நாயகியே
வாழ்வுக் குதவாவிட்டால் சாவுக் குதவவேண்டும்
என்றுசொல்லி கோவிலரு மிளங்கொடியைக் கேட்கலுற்ருர்
அப்போது மாதகியா ளாரணங்கு நாயகியாள்
தாயார் வசந்தமாலை தையல்முன்னே யோடிவந்து
மாண்டு மடியவில்லை மாதாவே கோவிலனர்
செத்து மடியவில்லை செட்டிபிள்ளை யென்றுசொன்னள்
அப்போது வசந்தமாலை ஆரணங் கேதுசொல்வாள்
ஆற்றுவெள்ளம் நேற்றுவந்த தாகையால் தள்ளுமென்ருள்
அப்படியே சம்மதித்து ஆரணங்கு மாதகியாள்

## பிழைத்துவந்த கோவிலரை மாதகி மறுபடியும் ஆற்றில் தள்ளுதல்.

செட்டியார் முன்னேவந்து தேவடியா ளேதுசொல்வாள்
எக்காலஞ் செல்லுமோ என்முகத்தை நீர்பார்க்க
என்-கைபாலே ஸ்நானமது கட்டழகா செய்யவேண்டும்

வாருமென்று சொல்லி வைகைக்குக் கூட்டிவந்தாள்
வைகைக் கரைதனிலே வடிவழகன் றனையிருத்தி
எண்ணெயைக் கொண்டுவந் தின்பமுடன் தான்தேய்த்து
அரைப்புகள் கொண்டுவந்து அன்பாகத் தான்தேய்த்து
ஆற்றிலே முழுகச்சொன்ன ளாரணங்கு மாதகியாள்
இருகரையுஞ் ஜலம்பெருகி ஏகமாய்ப் போகிறதே
எப்படிக்கு நானிறங்கி முழுகுவே னேந்திழையே
ஊனுங்கொடி கொண்டுவந்து உத்தமனைக் கட்டியவள்
ஆற்றி லிரங்குமென்று ளரிவையந்த மாதகியாள்
ஆற்றி லிறங்கின ராணழகர் கோவிலரும்
சுழலி லகப்பட்டார் சுந்தரனு ரப்பொழுது
அடித்துகொண்டு போகிறதே ஆற்றிலே கோவிலரை
அப்போது மாதகியா ளரண்மனைக்கு வந்துவிட்டாள்
ஓரலைக் கமுங்கியே மற்றோரலைக் கெழும்புறதும்
இப்படி வரும்போது இன்பமாய்க் கோவிலரும்
பெண்ணேகண்ணே மாதகியே பெண்ணரசே மாண்டாயோ
நான்மாண்டால் சேதமில்லை நாயகமே மாண்டாயோ
ஆரணங்கைத் தானினைக்க அழுத்துகிறாள் கங்கையவள்
கட்டுவிட்டு மெய்மறந்து கலகலத்து மேனியெல்லாம்
கூண்டுவிட்டு இவருயிரும் குதிக்குதுபார் ஆறுதனில்
ஆவிபோகும் வேளையிலே யாரை நினைக்கலுற்றார்
பத்தாத பத்தினியே பழுதுபடா ரத்தினமே
மாலைபறி போகுதடி மணவாளன் மாளுகிறேன்
தலைபறி போகுதடி தலைவனிங்கே மாளுகிறேன்
கூறைபறி போகுதடி கொற்றவனார் மாளுகிறேன்
பத்தினியு மெய்யானல் பக்கத்துணை வந்திடுவாய்
கண்ணகியு மெய்யானல் காக்கநீ வாருமென்றார்
அப்போது கங்கை அரிவையவள் தான்பார்த்து
பத்தினியாள் புருஷன்தன்னைக் கொன்றாலே பாவம்வரும்
என்று-ஆற்றி லொதுக்கிவிட்டு அக்கரையில் தள்ளினளே

## மாத்கி ஆற்றில் தள்ளின கோவிலர் கண்ணகியிடம் வந்துசேருதல்.

காவிரிப்பூம் பட்டணத்தில் கரையி லொதுக்கிவிட்டாள்
அப்போது கோவிலனு ராணழக ரேதுசெய்தார்
காதடைப்புக் கொண்டு களையாகி விழுந்துவிட்டார்
கண்ணகியைத் தானினைக்கக் காதடைப்புத் தீர்ந்ததங்கே
களைசோபந் தான்தெளிந்து எழுந்திருந்தார் கட்டழகர்
கற்கட்டுத் திருக்குளத்தின் கரையருகி லத்திமரம்
அத்திமரத் தோரத்திலே ஆணழகர் வந்திருந்தார்
பூவாத அத்திமரம் பூவாய்ச் சொரியுதங்கே
காயாத மரங்களுமே காய்த்துச் சொரியுதங்கே
பூக்காத மரங்களுமே பூத்துச் சொரியுதங்கே
அத்தி மரத்திலே யாணழகன் தானிருந்து
அத்திப்பழந் தான்புசித்து ஆணழகர் வீற்றிருந்தார்
கண்ணகியின் தாதியர்கள் கன்னியர்க ளேழுபேரும்
செப்புக் குடங்கொண்டு ஜலம்மொள்ள வாறூர்கள்
அத்தி மரத்தினுட அதிசயத்தைக் கண்டார்கள்
பூவாத அத்திமரம் பூத்துச் சொரியுதடி
காயாத அத்திமரம் காய்த்துச் சொரியுதடி
பழமோ மிகப்பழுத்து பழமா யுதிருதடி
பாரி மரமேறிப் பழம்பறிப்போ மென்றுசொல்லி
அண்ணுந்து பார்த்தார்கள் அரிவையுட தாதியர்கள்
திருப்பதி திம்மனைப்போல் திகைதப்பி வந்ததடி
இந்த மரமதனில் இருக்குதடி திம்மனது
என்ன-எல்லாரும் பார்க்கலுற்ருர் இன்பமுடன் திம்மனைத்தான்
தலையிறங்கிக் கொண்டுநின்றுர் தனஞ்சயரு மப்பொழுது
அதிலேயொரு தாதியவ ளன்பாகத் தான்பார்த்து
குரங்கல்ல குரங்கல்ல கோவிலனு ரென்பார்கள்
கண்ணகியாள் தன்னுடைய கணவனிவ னென்பார்கள்
பத்தினியாள் தன்னுடைய உத்தம புருஷனடி

முடிவரசன் வடிவழகன் முத்துவிற்கும் வர்த்தகண்டி
கலைமான் சிலையழகன் கப்பலோட்டும் வர்த்தகண்டி
என்றுசொல்லித் தாதியர்க ளேந்திழைமா ரோடிவந்தார்
கண்ணகியாள் முன்னேவந்து கைகூப்பித் தெண்டனிட்டார்
மாலையிட்ட வுன்கணவர் மங்கையரே வந்தார்காண்
தாலி தரித்தவுன்தன் தனஞ்சயனுர் வந்துவிட்டார்
கூறை தரித்தநல்ல கோவிலனுர் வந்தார்காண்
என்றுமிகச் சொல்லையிலே ஏந்திழையாள் தான்கேட்டு
பல்லக்குத் தான்கொடுத்தாள் பைங்கொடியா ளப்போது
கட்டுவர்க்கம் பூஷணமும் கண்ணகியாள் தான்கொடுத்தாள்
அலங்காரஞ் செய்தவரை அழைத்துமே வாருமென்ருள்
அப்போது தாதியர்கள் அன்பாக ஓடிவந்து
அத்தி மரத்திருக்கும் ஆணழகர் கோவிலரை
தாழ இறங்குமென்ருர் தையலந்தத் தாதியர்கள்
இதனைவிட் டம்மணமாய் எப்படி இறங்குவேனுன்
அங்கவஸ் திரத்திலொன்று இங்கெடுத்துப் போடுமென்ருர்
ஏந்திழையார் வஸ்திரத்தை யெடுத்துமே போட்டார்கள்
அவர்-தம்மேலே போட்டுத் தாழ இறங்கிவந்தார்
அந்தக் குளத்திலே அன்பாகத் தாம்முழுகி
ஈரத் துகில்களைந்து இந்திரவர்ணப் பட்டுடுத்தி
நனைந்த துகில்களைந்து நாகரீகப் பட்டுடுத்தி
சிவசிவா வென்றுமே திருநீற்றுக் காப்பணிந்து
அரகரா வென்றுமே ஆண்டவனைத் தோத்தரித்தார்
ஆடையா பரணங்களும் அடங்கலுந் தாமணிந்து
பல்லக்கின் மேலாகப் பட்டணத்தா ரேறினுரே
பல்லக்குத் தானெடுத்துப் பாங்கியர்கள் வாருரே
காவிரிப்பூம் பட்டணத்தில் கண்ணகியா ளந்தப்புரம்
அரண்மனைக் குள்ளாக அவர்க ளிறங்கிவிட்டார்
கோவில னுருமங்கே கொப்பெனவே தாமிறங்கி
தலைக்கடைத் திண்ணையிலே தனஞ்சயரு முட்கார்ந்தார்
தாதிக ளோடிவந்து தையலுக்குத் தெண்டனிட்டு
மணவாளன் வந்தாரென்று மங்கையர்கள் தாமுரைத்தார்

## கண்ணகி தன்புருஷனைக் காணுதல்.

அவ்வார்த்தை தான்கேட்டு ஆரணங்கு கண்ணகியாள்
அவரழகைப் பார்ப்போமென்று ஆரணங்கு வாருளே
அல்லார் தலைகூந்தல் அறுபத்து மூன்றுமுழம்
கண்ணகியாள் கூந்தலது கணக்கு மிதங்களில்லை
கூந்தல் விரித்தாளே கொடியிடையாள் கண்ணகியும்
தேகமெல்லாந் தான்மறைத்து தேன்மொழியும் வாருளே
தலைக்கடைத் திண்ணையண்டை தையலவள் வந்துநின்றுள்
கோவிலனுர் தம்மழகைக் கொடியிடையுந் தான்பார்த்து
என்னைவிட்டுப் போனீரே என்னவரம் பெற்றுவந்தீர்
மாதகியாள் செய்ததெல்லாம் மன்னவரே செப்புமென்றுள்
கூத்தியார் செய்ததெல்லாம் கொற்றவரே செப்புமென்றுள்
வேசியவள் செய்ததெல்லாம் வேந்தரே செப்புமென்றுள்
வைப்பாட்டி செய்ததெல்லாம் வர்த்தகரே சொல்லுமென்றுள்
தீயா யெரித்திடுவேன் தேன்மொழியாள் கண்ண்கிநான்
கல்லாக மண்ணுகக் கரியாகச் செய்திடுவேன்
புல்லாகப் பூண்டாகப் புழுவாகச் செய்திடுவேன்
அவள்செய்த அக்ரமத்தை அரிவையவள் செப்புமென்றுள்

## கோவிலர் தம் பெண்சாதியுடன் வசனித்தல்.

அப்போது கோவிலனு ராணழகர் தாம்பார்த்து
காதை யடைக்குதடி களையாய் வருகுதடி
பசியடி யென்தனுக்குப் பற்றிப் பிடுங்குதடி
இளைப்புங் களைப்புந்தீர்ந்தா லெல்லா மெடுத்துரைப்பேன்
என்ன-அப்போது கண்ணகியாள் ஆரணங்கு தானெழுந்து
தாதியரைத் தானழைத்துச் சமையல்செய்ய வேண்டுமென்றுள்
அவ்வசனங் கேட்டு ஆணழக ரேதுசொல்வார்
தாதிகையாற் சமைத்தால் சாதமுண்ண மாட்டேனென்றுர்
பத்தினியாள் நீசமைத்தால் பட்சணஞ் செய்வேனென்றுர்
பத்தினியா ளுன்கையால் பரிமார வேணுமென்றுர்
அப்போது கண்ணகியா ளாரணங் கேதுசொல்வாள்

சுட்டசட்டி தொட்டறியேன் சோற்றுபதம் நானறியேன்
ஆக்க வகையறியேன் ஆளனுக்குப் போட்டறியேன்
எப்படி சாதந்தா னிதமாகச் சமைத்திடுவேன்
என்று-தாதிகளைத் தானழைத்துத் தையலந்த கண்ணகியாள்
செப்புக் குடமெடுத்து ஜலத்துக்கு வாருமென்றாள்
பத்தினியும் முன்னாலே பாவையரும் பின்னாலே
பவளக்கட்டுத் திருக்குளத்தில் பாவையர்கள் வாருரே
கணைக்கால் ஜலத்திலே கன்னியவள் வந்துநின்றாள்
முழங்கால் ஜலத்திலே மொய்குழலும் வந்துநின்றாள்
அட்டாளுஞ் சொக்கலிங்கம் ஆண்டவரைத் தானழைத்து
மதுரையில்வாழ் சொக்கலிங்கம் மகாதேவ ரைநினைத்து
அங்கயற்கண் மீனாட்சி அம்மனைத் தானினைந்து
பத்தினியாள் மெய்யானால் பலிக்கவேணு மென்சாபம்
என்று-தன்கைப் பெருவிரலால் தண்ணீரைச் சுழற்றிடவே
கட்டை விரல்கொண்டு கங்கையைச் சுழற்றிடவே
செப்புக் குடம்போலே திரண்டது கங்கையது
மாளிகைக் குள்ளாக மங்கையவள் வந்தாளே
சின்னச்சம் பாவரிசி தீட்டி யுலையிலிட்டாள்
முத்துப்போல் சாதமதை மொய்குழலாள் தான்வடித்தாள்
நந்தியென்னும் பூசணிக்காய் நாலுவிதந் தான்சமைத்தாள்
வாழைக்காய்ப் பொரியலிட்டு வழுதலங்காய் தான்சமைத்தாள்
புடலங்காய் தான்சமைத்தாள் பீர்க்கங்காய்ப் பொரியலிட்டாள்
பத்து விதக்கறியும் பதினெட்டு பச்சடியும்
எட்டு விதக்கறியும் இயலான போஜனமும்
பச்சென்ற கீரையும் பாங்கான துவையல்களும்
அவியல் துவட்டல்களு மானதொரு கூட்டமுதும்
சாற்றமுதுங் கட்டமுதும் சரிகூறாய்த் தான்சமைத்தாள்
அழகாகத் தான்சமைத்து அடுக்கிட்டு மூடிவைத்தாள்
ஆணழகன் முன்பாக அரிவையவள் ஓடிவந்து
தென்னம்பாளை ஓலைகொண்டு தேவியுங் கைகொடுத்தாள்
பாளைகொண்டு பல்விளக்கி ஓலைகொண்டு நாவழித்தார்

தீர்த்தநீர் தான்கொண்டு திருவாயுங் கொப்பளித்து
வசந்தநீர் தான்கொண்டு மதிமுகமுஞ் சுத்திசெய்து
பூசைபண்ணு மண்டபத்தில் புண்ணியனூர் வந்துநின்றார்
நாலிரண்டு மந்திரமாய் நடத்தினூர் பூசைதன்னை
பூசை முடிந்தது புண்ணியனூர் கோவிலர்க்கு

## கண்ணகி தன்புருஷனுக்கு அன்னமிடுதல்.

வாழை யிலைபோட்டு வட்டித்தாள் சாதந்தன்னை
எட்டு விதக்கறிகள் இருபத்தோர் பச்சடியாம்
பத்து விதக்கறிகள் பாங்கான பச்சடியாம்
அவிட்டல் துவட்டலது ஆனதெல்லாந் தான்படைத்தாள்
வெந்நீரும் நீர்மோரும் விதமாக வைத்தார்கள்
தாதியர்க ளோடிவந்து தனஞ்சயரைத் தானழைத்தார்
போசன முண்ணுமென்றார் பொற்கொடிமார் தாதியர்கள்
கூட்டிக் குழப்பியே கொற்றவர் தாமுமப்போ
ஒருவுண்டை தான்வைத்தா ருத்தமனூர் வாய்தனிலே
அப்போது கோவிலர்க்கு யார்நினைவு வந்ததுபார்
ஆசைதந்த மாதகியை அரிவையரைத் தாம்நினைந்து
போசன முண்ணுமற் புண்ணியருந் தாமெழுந்து
ஆனையை நான்மறந்து அறியாமல் சாதமுண்டேன்
என்றுசொல்லி கோவிலரு மிருந்துவிட்டார் மர்மமாக
அப்போது கண்ணகியா ளாரணங்கு தான்பார்த்து
கண்ணகிநான் வேம்பானேன் கைசாதம் வேம்பாச்சே
பத்தினிநான் வேம்பானேன் பகிர்ந்தசாதம் வேம்பாச்சோ
எடுத்துப் புசியுமென்று இயம்பினாள் கண்ணகியாள்
பத்தினியும் வேம்பல்ல பகிர்ந்தஅன்னம் வேம்பல்ல
உத்தமியும் வேம்பல்ல உற்றஅன்னம் வேம்பல்ல
எனக்-காசைதந்த மாதகிக்கு அரிவையர்க்கு தானுமிப்போ
மாதகியாள் தனக்கு மரக்காற்பொன் கொடுக்கவேணும்
கடனுக்கு வழிசொன்னூற் கைசாத முண்பேனென்றார்
கையிலே காசுமில்லை கடன்கொடுப்பா ராருமில்லை

மடியிலொரு காசுமில்லை வர்த்தகஞ் செய்வோமென்றால்
நீ-வேசிகடன் கொடுப்பதெப்போ வீட்டுக்கு வாறதெப்போ
பாக்கிபணங் கொடுப்பதெப்போ பஞ்சணை சேர்வதெப்போ
என்கையி லொன்றுமில்லை என்னுடைய புண்ணியரே

## கோவிலர் கண்ணகியைச் சிலம்பு கேட்குதல்.

என்ன-காற்சிலம்பு தந்தாயானால் கண்மணியே விற்றுவாறேன்
மணிச்சிலம்பு தந்தாயானால் மதுரையிலே விற்றுவாறேன்
பொற்சிலம்பு தந்தாயானால் பொன்மதுரை விற்றுவாறேன்
செஞ்சிலம்பை விற்றுமே தேவடியாள் கடன்கொடுப்பேன்
காற்சிலம்பைத் தாருமென்று கட்டழகர் கேட்கலுற்றார்
கூடப் பிறந்ததொரு கொடியிடையாள் காற்சிலம்பு
கன்னு னறிந்ததில்லை கடைத்தெருவிற் போனதில்லை
செட்டி யறிந்ததில்லை திராசில்வைத்து நிறுத்ததில்லை
கொல்ல னறிந்ததில்லை குண்டுவைத்து நிறுத்ததில்லை
ஓடாணி தானுமில்லை யுத்தமியாள் காற்சிலம்பு
திருகாணி தானுமில்லை தேன்மொழியாள் காற்சிலம்பு
எப்படிக்குத் தான்கழற்றி இதமாய்க் கொடுப்பேனென்று
அட்டாளும் சொக்கரையும் அம்மனையுந் தானினைத்தாள்
மதுரைவாழ் சொக்கர்தனை மனதிலே தானினைத்தாள்
சொக்கர் கிருபையாலே திருகாணி யுண்டாச்சு
ஓடாணி யுண்டாச்சு உத்தமனார் கிருபையாலே

## கண்ணகி சிலம்பு கழற்ற அச்சிலம்பு புலம்புவது.

திருவாணியில் கைபோட்டு தேன்மொழியாள் வாங்கையிலே
வாயைத் திறந்துதான் மணிச்சிலம்பு என்னசொல்லும்
கழற்றாதே கண்ணகியே கணவனுக்குத் தீம்புவரும்
தென்மதுரை போனாரானால் செத்து மடிந்திடுவார்
வடமதுரை போனாலே மாண்டு மடிந்திடுவார்
இந்தப் பயணமது இனிதிரும்பப் போறதில்லை
மதுரைக்குச் சென்றாலே மறுத்துவரப் போறதில்லை

என்றுசொல்லி செஞ்சிலம்பு ஏங்கிப் புலம்புறது
காணுது போலேயல்லோ கண்டுவிட்டாள் கண்ணகியும்
மணிச்சிலம்பு அழுகிறதை மயிலனையாள் தான்பார்த்து
மதுரைக்குப் போனுலே மாண்டு மடீவீரென்று
மாண்டு மடீவீரென்று மணிச்சிலம்பு சொல்ல
கண்ணகி-ஆகையால் தென்மதுரை ஆணழகா போகாதீர்
குற்றுலங் குறநாடு கொற்றவரே போய்வாரும்
கும்பகோணம் மாயூரம் குறதேசம் போய்வாரும்
மதுரைக்குப் போகாதீர் மன்னவரே யென்றுரைத்தாள்
அப்போது கோவிலனு ரவளுக் கெடுத்துரைப்பார்
செத்தாலுந் தென்மதுரை சிலம்புவிற்றுல் தென்மதுரை
அள்ளவேணுந் திருடவேணு மணிமதுரை சீமையிலே
என்சிலம்பை விற்றுலே யெனக்குப் பகைவருமோ

## கோவிலர் சிலம்பெடுத்து வருகையில் கண்ணகி பின்தொடர்வது.

சிலம்பைமெள்ள வேயெடுத்து செட்டியார் தாமெழுந்தார்
மதுரைக்குப் போவேனென்று வர்த்தகருந் தாமெழுந்தார்
நான்கூட வாறேனென்று நாயகியும் பின்றொடர்ந்தாள்
உன்கூட வாறேனென்று உத்தமியுங் கூறலுற்றுள்
தனந்தேடிப் போமிடத்தே தார்குழலே வரலாமோ
புகழ்மதுரை போய்ச்சேர்ந்து பொழுதிருக்க வாறேண்டி
நீ-இங்கே இருவென்று யெழுந்தாரே கோவிலரும்
அப்போது கண்ணகியா ளழகுபெண்ணு ளேதுசொல்வாள்
நீபோற விடத்துக்கு நான்கூட வாறேனென்றுள்
நான்கூட வாறேனென்று நலமாக வெழுந்திருந்தாள்
மாளிகைக் குட்புகுந்து மங்கையர்க்குச் சொல்லிவிட்டு
தீவிரமாய் வாருமென்று தெருத்திண்ணை வந்துநின்றுர்
இனியிருந்தால் வருவாளென்று எழுந்து நடக்கலுற்றுர்
பையெடுத்துத் தோளில்வைத்துப் பட்டணத்தார் வாருரே
காதவழி தூரங் கட்டழகர் வாருரே

அந்தப் புரம்போன ஆரணங்கு கண்ணகியும்
தாதியர்க்குச் சொல்லிவிட்டுத் தையலரும் வந்துநின்றாள்
வர்த்தகனைக் காணுமல் மங்கையவ ளென்னசெய்வாள்

## கோவிலர் தனித்துப்போனதால் கண்ணகி சாபமிட்டு புருஷனைக்கண்டு இருவரும் போகுதல்.

காத வழிதூரம் கடுகெனவே போறாளே
அவ்வழியிற் குத்துக்கல் லங்கொன்று நின்றிடவே
என்கணவன் போறவழி ஏதென்று குத்துக்கல்லே
இந்தக்கல் மாதகிபோ லிருக்க வேணுமென்று
ஐந்தெழுத்தும் பாவனையும் அரிவைபோல் தோணவேணும்
பத்தெழுத்தும் பாவனையும் பாவைபோல் தோணவேணும்
திருக்கடையூர்ப் பட்டணத்தில் தெய்வரம்பை மாதகிபோல்
அழகு துலங்கவேணும் ஆனந்தங் கொஞ்சவேணும்
வடிவு துலங்கவேணும் வடிவழகு கொஞ்சவேணும்
என்றுமிகக் கண்ணகியா ளிட்டாள் பெருஞ்சாபம்
பத்தினியாள் சாபமிடப் பாவையர்போல் தோணுதங்கே
இதைக்-காணு ததுபோலக் கண்டுவிட்டார் கோவிலரும்
அடி-ஆசைதந்த மாதகியே அரிவையரே எங்குவந்தாய்
சுகந்தந்த மாதகியே சுந்தரியே எங்குவந்தாய்
திருக்கடையூர் தானிருந்து தேன்மொழியே வந்ததென்ன
உன்னுடைய கடனுக்காக உத்தமியாள் சிலம்பெடுத்து
காற்சிலம்பைத் தானெடுத்துக் கனமதுரை விற்கப்போறேன்
வழிமறிக்க வந்ததென்ன மங்கை யிளங்கொடியே
கானு மிகக்கடுக்க குறுவடியும் கொப்பளிக்க
வெயிலிலுங் கானலிலும் மெல்லியரே வந்ததென்ன
முத்தான வாய்திறந்து உத்தரவு சொல்லும்பெண்ணே
வாயைத் திறக்கவில்லை மணிப்பதுமை யப்போது
தானைத் திறக்கவில்லை தனிவார்த்தை பேசவில்லை
ஏண்டிபெண்ணே பெண்மயிலே இத்தனைக் கோபமென்ன
என்று-கட்டித் தழுவினர் கனிவாயை முத்தமிட்டார்

கட்டி யணைக்கையிலே கன்னியுட தேகமது
சேர்ந்து அணைக்கையிலே தேன்மொழியாள் தேகமது
வெயிலிலே வந்ததினால் மெல்லியுட தேகமது
கறுத்து உடல்வெதும்பிக் கல்லா வுறுத்துதென்று
சொல்லியே கோவிலருந் தோகையைப் பார்த்தாரே
கண்ணகி சாபமிடக் கல்லாகத் தோணுகுது
முடிவேந்தர் போலழகன் முத்துவிற்கும் வியாபாரி
கண்ணகியைப் பார்த்துவிட்டார் கட்டழகர் கோவிலரும்
பேரஞ்செய்யப் போமிடத்தே பெண்ணுள் வரலாமோ
வீட்டிலே உன்னைவிட்டு மெல்லியரே வந்தேனே
வீட்டைவிட்டு ஏன்வந்தாய் மெல்லி யிளங்கொடியே
என்னுெத்த வர்த்தகர்க ளென்னை மதியார்கள்
சரியொத்த வர்த்தகர்கள் சற்று மதியார்கள்
ஆனாலும் வாடியென்று ஆணழகர் முன்னடந்தார்
ஆணழகர் முன்னடக்க அரிவையவள் பின்னடக்க
காடு மலைகளெல்லாங் கடுகெனவே தாம்நடந்து
சில்லென்ற காடுஞ் செடியும் வனந்தாண்டி
வாறு ரிருவர்களும் வனமாய் வனந்தாண்டி
மதுரைக்குச் சேர்ந்திருவர் வருகின்ற வேளையிலே
பத்தாத பத்தினியும் பழுதுபடா ரத்தினமும்
குற்றமற்ற மேல்ரதியாள் கோவிலிங்கி சீர்மகளும்
வர்த்தகரைப் பார்த்து மயிலனையா ளேதுசொல்வாள்
செட்டியாரைப் பார்த்துத் தேன்மொழியா ளேதுசொல்வாள்
காத வழிநடந்து கால்களெல்லாம் நோகுதையா
தூர வழிநடந்து தொடைகளெல்லாம் நோகுதென்றாள்
எடுத்தடி வைப்போமென்றால் இனிநடக்கக் கூடவில்லை
தண்ணீ ரதுதாகம் தாங்க முடியவில்லை
நீரின்மேல் தாகமது நிற்கமுடி கூடவில்லை
தண்ணீரைக் கொண்டுவந்தால் தையல் பிழைத்திடுவேன்
என்றுசொல்லிக் கண்ணகியா ளேந்திழையுங் கேட்கையிலே
பெண்சாதி கால்விலங்கு பிள்ளையொரு சுள்ளாணி

கட்டுச்சாத மூட்டையுங் கைக்குக்கன மென்பார்கள்
அப்படியே யாச்சுது ஆரணங்கே யிப்பொழுது
இந்த வனத்திலேநீ ரெங்குகண்டு உண்டிடுவோம்
என்றுசொல்லி கோவிலனுர் இட்டுக்கொண்டு வாருராம்
எட்டிவனச் சோலையிலே ஏந்திழையைக் குந்தவைத்தார்
தன்கையிற் செம்பெடுத்துத் தண்ணீர்மெள்ள வாருரே
அந்நேர வேளையிலே அவ்வனத்தில் வாழுகின்ற
எதிர்காட்டுக் கள்ளரவ ரேழுபேர் வாருர்கள்
வெட்டிக் களைபறிக்கும் வேடர்களும் வாருர்கள்
குத்திக் களைபறிக்கும் குலவேடர் வாருர்கள்
இருண்டெழுந்த சோலையில் திரண்டெழுந்த சூரியன்போல்
பச்சை மலைதனிலே பவளம் முளைத்ததுபோல்

## கோவிலர் தண்ணீருக்குப்போக கள்ளர் கண்ணகியை மடக்குதல்.

கண்ணகியாள் தன்னிடத்தில் கள்ளர்கள் வாருர்கள்
ஆறுபேர் வந்துநின்ருர் ஆரணங்கு முன்பாக
ஆறுபே ருக்கிளையோ னனெொரு கள்ளனவன்
அத்தி மரமேறி ஆள்வரவு பார்க்கலுற்ருன்
அப்போது கள்ளர்கள் ஆரணங்கைத் தான்பார்த்து
ஆபரணந் தாருமென்று அங்கவளைக் கேட்கலுற்ருர்
என்னவென்று கேட்கலுற்ரு ரேழுபேர் கள்ளர்களும்
உன்னைக்குத்தி யெறிந்திடுவோங் கோடாலிக் காம்பாலே
வெட்டி யெறிந்திடுவோம் வீரமணி வாளாலே
என்றுசொல்லி கள்ளரவ ரெதிராக வந்துநின்ருர்
அப்போது கண்ணகியா ளாரணங்கு தான்பார்த்து
உச்சியிலே தானிருந்து உள்ளங்கால் தான்தொடங்கி
பூண்டிருந்த ஆபரணம் பொட்டெனவே தான்கழற்றி
தாலி தவிரஎல்லாந் தான்கழற்றி யொன்ருக
கள்ளருக்கு முன்னேவைத்தாள் கண்ணகியாள் பத்தினியும்
எடுத்துக்கொண்டு போங்களென்ரு ளேந்திழையு மப்போது

மரத்தின்மேல் நின்றவனும் மற்றவரைத் தான்பார்த்து
செட்டி யுடைமையிலே சேர்ந்தபொன் மெத்தவுண்டு
வர்த்தக னுடைமையிலே மாற்றுக் குறைச்சலுண்டு
பத்தரை மாற்றுப் பசும்பொன்னுந் தங்கமது
சூரியன் போலாகத் துலங்குது மங்கிலியம்
மங்கிலியந் தன்னைநீங்கள் வாங்கிவர வேண்டுமென்றான்
அவ்வார்த்தை தான்கேட்டு ஆறுபே ரோடிவந்தார்
மங்கிலியந் தாருமென்று மன்னவர்கள் கேட்கலுற்றார்

## கண்ணகி கள்ளருக்குச் சாபமிடுதல்.

அப்போ-கோபம் பிறந்தது கொம்பே ரிடையாட்கு
ஆறுபேர் கள்ளர்களை அரிவையுந் தான்பார்த்து
இவர்கள்-குத்துக்கல் லாகப்போகக் கொடுத்தாளே சாபமது
பத்தினியாள் சாபம் பலித்ததுகா ணப்பொழுது
உத்தமியாள் சாபம் உடனே பலித்ததுகாண்
கட்டாக நின்றார்கள் கள்ளர்க ளாறுபேரும்
மரத்தின்மேல் நின்றவனும் வௌவாலாய்த் தொங்கவென்று
வௌவாலாய்த் தொங்கவென்று மயிலனையாள் சாபமிட்டாள்
அப்படியே தொங்குகிறான் அத்திமரந்தனிலே
அந்தச் சமயத்திலே ஆணழகர் வாறாரே
செம்பு ஜலங்கொண்டு தீவிரமாய் வாறார்காண்
அண்டையிலே வந்துநின்ற ராணழகர் கோவிலனார்
ஆறுபேர் கள்ளர் அருகிருக்கக் கண்டாரே
இவர்கள்-ஆரடி பெண்ணேயென்று அரிவையரைக் கேட்கலுற்றார்
இந்நாட்டுக் கள்ளரிவ ரேழுபேர் வந்தார்கள்
ஆபரணங் கேட்டாரிந்த ஆறுபேர் கள்ளர்களும்
வெட்டி யெறிவோமென்றார் வேடர்க ளாறுபேரும்
அஞ்சிப் பயந்துநான் ஆபரணந் தான்கொடுத்தேன்
தாலியை வேண்டுமென்று தனஞ்சயரே தாம்கேட்டார்
கள்ளர்க ளாறுபேரைக் கல்லாய்ச் சமைத்துவிட்டேன்
மரமேறி நின்றவனை வௌவாலாய்ச் சமைத்துவிட்டேன்

என்றுசொல்லிக் கண்ணகியும் எடுத்துரைத்தாள் கோவிலர்க்கு
அப்போது கோவிலனுர் அரிவைதனைத் தான்பார்த்து
எழுப்பிவிடச் சொன்னுராம் இன்பமுள்ள வர்த்தகரும்

## கண்ணகி கல்லாய்ச்சமைத்த கள்ளர்களை யெழுப்பியது.

அப்போது கண்ணகியா ளரிவையவள் ஏதுசெய்தாள்
கல்லாய்ச் சமைத்தவரைக் கடுக எழுப்பிவிட்டாள்
வெளவாலாய்த் தொங்குவோனை மாது எழுப்பிவிட்டாள்
எப்போதும் போலே எழுந்தார்கள் கள்ளரெல்லாம்
கண்ணகியாள் முன்னேவந்து கட்டழகர் தெண்டனிட்டு
ஆறுதப்பு நூறுபிழை அடியார்கள் செய்ததெல்லாம்
கோடிபிழை செய்தாலுங் கொண்டணைக்க வேண்டுமம்மா
என்ன-அப்போது கண்ணகியா ளாரணங் கேதுசெய்தாள்
உப்பரவ ரொட்டராக உத்தமரே போங்களென்முள்
அப்படியே யாகுமேன்மென் றவர்களும் போனுர்கள்
இப்படிக்குச் சாபமது தந்தாளாங் கண்ணகியாள்
மதுரைக்கு வாருர்கள் மனமகிழ்ந் திருவருமாய்

## சொக்கருடைய ஆலயத்தைக் கோவிலரும் கண்ணகியும் காண்பது.

மதுரைச் சமீபமது வருகிற வேளையிலே
நாலுபுரக் கோபுரமும் நன்ருகத் தோற்றுகுது
அருமையாய்த் தோற்றுகுது ஆருடைய கோவிலென்முள்
அடி-பிட்டுக்கு மண்சுமக்கும் பேயாண்டி சொக்காடி
சொக்கரது ஆலயம் தோகையரே யென்றுரைத்தார்
அங்கயற்கண் மீனுட்சி அம்மனுட ஆலயந்தான்
அப்பாலே தோற்றுவது யாருடைய ஆலயங்காண்
கூடலழ கியபெருமாள் கோவிலடி மாதரசே
அப்பாலே தோற்றுவது யாருடைய ஆலயங்காண்
இம்மையிலே நன்மைதரு மீசருட கோவிலடி

அப்பாலே தோற்றுகுது அங்கொரு குன்றதுபோல்
அக்குன்று ஆருடைய ஆலயங்காண் சொல்லுமென்ருள்
அப்போது கோவிலரும் அன்பாக ஏதுரைப்பார்
திருப்பரங் குன்றமென்றும் சிக்கந்த மலையென்றும்
சொல்லுவார் கண்ணகியே சுப்ரமண்யர் கோவிலடி
முன்புறம் ஆலயம்போல் பின்புறம் அரண்மனைபோல்
காணுதிது ஆருடைய கட்டடங்காண் சொல்லுமென
அப்போது கோவிலரும் அன்பாக ஏதுரைப்பார்
ஆருயிரம் பாண்டியர்கள் அணிதிரளார் மன்னவர்கள்
பாண்டியர்க ளாலயங்கள் பைங்கிளியே யென்றுரைத்தார்
இப்படிக்குத் தான்பேசி இருவர் வரும்பொழுது

## கண்ணகி விநாயகரை ஆருடங்கேட்க அவர் சொல்லியது.

கள்ள விநாயகர்முன் கண்ணகியா ளோடிவந்து
கைகூப்பித் தெண்டனிட்டுக் கண்ணகியாள் கேட்கலுற்ருள்
சிலம்புகொண்டு வாருரே செட்டிபிள்ளை கோவிலனுர்
அவர்-சிக்கு சிலுகில்லாமல் திரும்பி வருவாரோ
அழும்புக ளில்லாமல் அவர்வந்து சேர்வாரோ
என்றுசொல்லி ஆருடம் ஏகதந்த ரைக்கேட்க
வாயைத் திறக்கவில்லை மறுவார்த்தை பேசவில்லை
தாளைத் திறக்கவில்லை தனிவார்த்தை பேசவில்லை
மௌனமாய்த் தானிருந்தார் மங்கையர்க்கு முன்பாக
கோபம் வருகுதங்கே கொடியிடையாள் கண்ணகிக்கு
அடிமடியில் கைபோட்டு அம்பலத்தி விழுக்கலுற்ருள்
சொல்லுகிறேே மென்றுமவர் சொல்லுவார் விநாயகரும்
இந்தப் பயணம் எழில்மதுரை போவாரானுல்
மாண்டு மடிந்திடுவார் வரப்போற தில்லையென்ருர்
துரும்பெடுத்து மேற்போடுந் துன்மார்க்க மதுரையது
கொடியெடுத்து மேற்போடுங் கொடிதான தென்மதுரை
நிந்தையிட்டுத் தலையைவெட்டும் நீதியில்லா தென்மதுரை

இந்த மதுரைதமக் கிவர்போனால் பெண்ணரசே
திரும்பிவரப் போறதில்லை தேன்மொழியே உன்புருஷன்
பாவிதட்டான் தாயாதி பாண்டியனே பங்காளி
மூத்த தமயனவன் முதற்றமையன் பிள்ளையென்று
ஒப்பாரி கொண்டு உறவுசொல்லித் தானழைப்பான்
வாத்தியா ரடித்ததினால் வனம்போன பிள்ளையென்று
செப்பி யழைத்துச் சிலம்பு தனைப்பறித்து
கட்டின கட்டோடே கச்சேரி கொண்டுபோவான்
நீதிகேளாப் பாண்டியர்கள் நிற்கத்தலை வெட்டிவைப்பார்
பழிகார மதுரைதேடி பட்டணத்தார் போனாலே
இறந்து மடிந்திடுவார் இனிதிரும்பப் போறதில்லை
பின்னேவருங் காரியத்தை முன்னேநான் சொல்லிவிட்டேன்
என்று விநாயகரும் எடுத்துரைத்தார் கண்ணகிக்கு
அவ்வசனந் தான்கேட்டு ஆரணங்கு வாருளே
கோவிலனார் முன்பாகக் கொம்பனையாள் வந்துநின்று
விநாயர் சொன்னதெல்லாம் விபரம் விபரமதாய்
கட்டழகர் கோவிலர்க்கு கண்ணகியாள் தானுரைத்தாள்
கண்ணகியாள் சொன்னசொல்லு காதுவழி கொள்ளாமல்
எழுந்து நடந்தாராம் இன்பமுள்ள கோவிலரும்
மதுரையைத் தான்தேடி வாருரே கோவிலனார்
வண்டியூர் பட்டணமே வந்தார்க ளப்போது
கண்ணகியு மேதுரைப்பாள் கணவரைத் தான்பார்த்து
இப்பெரிய பட்டணத்தில் என்னை யடைக்கலமாய்
மதுரைபோய் வருமளவும் வைப்பீ ரெனவுரைத்தாள்
கோவிலனு மப்போது கொம்பனைக்கு ஏதுரைப்பான்
யார்வீடு தேடியுன்னை அடைக்கலமாய் வைப்பேண்டி
வேளாளர் வீட்டில்வைத்தால் வேலைகள் மெத்தவுண்டு
முப்போகம் விளைந்தாலும் உப்புக்குநெல் லில்லையென்பார்
இன்னம்-யார்வீடு தேடிவைப்பே னரிவையே யுன்தனையும்
பள்ளர்கள் வீடுதேடிப் பாவையரே வைப்பேனே
ஏருழும் வேளையிலே நாற்றுநட வாருமென்பார்

யார்வீடு தேடியுன்னை அடைக்கலமாய் வைப்பேண்டி
கோமுட்டி வீடுதேடி கொம்பனையே வைப்பேனோ
கடைவிற்கும் வேளையிலே கடைபெருக்க வாடியென்பார்
சேணியர் வீடுதேடித் தேன்மொழியே வைக்கட்டுமா
தறிபோடும் வேளையிலே நூலிழைக்க வாடியென்பார்
செட்டியார் வீடுதேடி தேன்மொழியே வைக்கட்டுமா
அரைக்க மிளகிடுவார் அரைக்கணக் கெழுதிவைப்பார்
கறிக்கு மிளகிடுவார் கால்கணக் கெழுதிவைப்பார்
விருந்தாளி வந்தாலே வருந்தியுலை வைக்கவொட்டார்
ஆர்வீடு தேடியுன்னை அடைக்கல மாகவைப்பேன்
இப்பெரிய பட்டணத்தில் இடைச்சிவீடு பாருமென்றாள்
இடைச்சிவீட்டில் வைத்தாலே இளைப்பானால் மோர்குடிப்பாய்
இளைப்பானால் மோர்குடிப்பாய் பசியானால் பால்குடிப்பாய்
என்று மிகவுரைத்து இருவரும் வாருரே
வைகைக் கரையோரம் வந்துநின்று ரிருவருமாய்
அந்தச் சமயத்தில் ஆச்சியவள் சிற்றிடைச்சி
தயிர்பானை தானெடுத்துக் தையலவள் வாருளே
அட்டாளுஞ் சொக்கரென்று ஆச்சி மனதிலெண்ணி
அடிவணங்கித் தெண்டனிட்டாள் அப்போது கோவிலரை
தெண்டனிட்ட ஆச்சிதனைக் கண்டந்தக் கோவிலனுர்
சிவசிவா வென்று திருச்செவியில் கையைவைத்தார்
அரகரா வென்று அருஞ்செவியில் கையைவைத்தார்
யாரென்று நீபணிந்தாய் அரிவை யிளங்கொடியே
சொக்கரல்ல சொக்கரல்ல சொர்ணகிரி செட்டிப்பிள்ளை
கூத்தியார் கடனுக்காகக் கொண்டவள் சிலம்பெடுத்து
கொண்டவள் சிலம்பெடுத்துக் கூடலிலே விற்கவந்தேன்
என்பேரு கோவிலனுர் என்கூத்தி மாதகியாள்
கூத்தியார் மாதகியாள் கொண்டவள் கண்ணகியாள்
கூத்தியார் கடனுக்காகக் கொண்டுவந்தேன் சிலம்பை
இந்த மதுரையிலே இன்பமுடன் விற்கவந்தேன்
என்றுமிகச் சொல்லையிலே எழுந்தாளே ஆச்சியம்மாள்

அந்தப் புரத்துக்கு அரிவையவள் வாருளே
ஆச்சிக்கு முன்பாக அழகுள்ள கோவிலரும்
கண்ணகி பின்பாகக் கடுகெனவே வாருர்கள்
ஆச்சியம்மாள் தன்மனைக்குள் அன்பாகத் தாம்நுழைந்து
தலைக்கடைத் திண்ணையிலே தனஞ்சயனு ருட்கார்ந்தார்
கண்ணகியா ளைப்பார்த்துக் கட்டழக ரேதுசொல்வார்
பசியா யிருக்குதடி பாவை யிளங்கொடியே
பசியிளப்பைத் தீர்த்துவிட்டால் பட்டணம் போய்வாறேன்
செஞ்சிலம்பு விற்றுநான் தேன்மொழியே வாறேனென்ருர்
அவ்வார்த்தை தான்கேட்டு ஆரணங் கேதுசொல்வாள்
கையிலே காசுமில்லை கடன்கொடுப்பா ராருமில்லை
எப்படிக்குச் சாதம்நான் இதமாகச் செய்வேனென்ருள்
ஆச்சி யிடத்தில்வாங்கி அரிவையரே சமையல்செய்யும்
மதுரைக்குப் போய்த்திரும்பி வந்தவுட னேகொடுப்பேன்
என்றவுடன் கண்ணகியும் இடைச்சியிடம் ஏதுரைப்பாள்
என்கணவன் கோவிலரும் இளைப்பா யிருப்பதினுல்
அமுதுபடி தந்தாலே ஆணழகர் கோவிலர்க்கு
சமையல்செய்து போடுகிறேன் தையலரே ஆச்சியென்ருள்
அப்படியே நல்லதென ஆச்சியவள் தானெழுந்து
அமுதுபடி காய்கறிகள் அத்தனையுந் தான்கொடுத்தாள்
பானை கழுவி பனிநீ ருலைவார்த்து
முத்துப்போல் சாதம் வடித்தாளே மொய்குழலும்
நந்தியெனும் பூசணிக்காய் நாலுவிதங் கறிசமைத்தாள்
வாழைக்காய் பொரியலிட்டாள் வழுதலங்காய்த் தான்குழம்பு
பீர்க்கங்காய் பொரியலிட்டாள் புடலங்காய் தான்குழம்பு
பத்து விதக்கறியும் பதினெட்டு பச்சடியும்
எட்டு விதக்கறியும் இருபத்தோர் பச்சடியும்
புத்துருக்கு நல்லநெய்யும் பொன்போல் சிறுபருப்பும்
அத்தி விறகொடித்து தித்திக்கப் பால்காய்ச்சி
இத்தனையுஞ் செய்துவைத்தாள் ஏலக் கருங்குழலாள்
பானைகொண்டு கைகொடுத்தாள் பைங்கிளியா ளப்போது

பாளைகொண்டு பல்விளக்கி ஓலைகொண்டு நாவழித்து
தீர்த்தநீர் வாங்கியவர் திருமுகஞ் சுத்திசெய்து
வசந்தநீர் வாங்கியல்லோ மதிமுகஞ் சுத்திசெய்து
பூசைபண்ணு மண்டபத்தில் புண்ணியனார் தாம்நுழைந்து
பூசை முடித்துக்கொண்டு புண்ணியனார் வந்திடவே
வாழை யிலைபோட்டு வட்டித்தாள் சாதமது
அருங்கறியும் போஜனமும் அன்பாகத் தான்படைத்தாள்
வெந்நீரும் நீர்மோரும் விதமாக வைத்தாள்காண்
போஜனங்க ளுண்டு பொடியிட்டுக் கைதிமிறி
தாம்பூல முங்கொடுக்கத் தான்தரித்தார் கோவிலரும்
கல்யாணப் பாய்போட்டாள் கண்ணகியாள் பெண்ணரசி
பட்டுப்பாய் போட்டாளே படுத்தாரே பட்டணத்தார்
ஆச்சியம்மை யருகாக அருங்கிளியும் போய்ப்படுத்தாள்
அந்நேர வேளையிலே எந்நேர மாகுதப்போ
வெள்ளி முளைக்குது விடிகோழி கூவுறது
அந்நேர வேளையிலே ஆணழகர் தாமெழுந்து
கண்ணகியைத் தான்பார்த்துக் கட்டழக ரேதுரைப்பார்
மதுரைக்குப் போய்வாறேன் மங்கையரே விடைகொடடி
ஆச்சி வசத்திலென்னை அடைக்கலமாய் வையுமென்றாள்
கண்ணகியைக் கைபிடித்துக் கட்டழக ரேதுசொல்வார்
ஆச்சியரைத் தானழைத்து அன்பாக ஏதுசொல்வார்

## கோவிலனார் கண்ணகியை ஆச்சியினிடத்தில் ஒப்புவித்தது.

மாட்டுப்பால் பாக்கியத்தை வைத்திருக்கும் மாதாவே
ஆட்டுப்பால் பாக்கியத்தை ஆண்டிருக்கும் மாதாவே
மதுரைக்கு யான்போய் வருமளவுந் தாயாரே
பெற்றபிள்ளை போலாகப் பேணி வளர்த்திடுவாய்
கண்ணகியை யுன்மகள்போல் காத்து வளர்த்திடுவாய்
பத்தினியை உன்மகள்போல் பார்த்தே யிருந்திடுவாய்
உத்தமியை உன்மகள்போல் உகந்துநீ காத்திடுவாய்

ஆயனைக் காத்ததுபோல் ஆச்சிநீ காத்திடுவாய்
மாயனைக் காத்ததுபோல் மாதாவே காத்திடுவாய்
நான்-தென்மதுரை தானேகித் திரும்பி வருமளவும்
அடைக்கல மென்மனைவி ஆச்சியே உன்னிடத்தில்
முக்கா லடைக்கலங்காண் மொய்குழலு மென்றுசொல்லி
கண்ணகியைக் கைபிடித்துக் காரிகையின் கைக்கொடுத்தார்
நல்வாக்கு நீகொடடி நாயகமே என்தனுக்கு
போய்வாரு மென்றாளே பொற்கொடியாள் கண்ணகியும்
ஆச்சியரைத் தான்பார்த்து ஆணழகர் கேட்கலுற்றார்
போய்வாறே னென்றுசொல்லிப் புண்ணியருங் கேட்கலுமே
போய்வாரு மென்றாளே பொற்கொடியா ளப்போது
கண்ணகியு மோடிவந்து கட்டழகர் முன்னேநின்று
எனக்கோ ரடையாள மின்பமுடன் செய்யுமென்றாள்

## கோவிலர் கண்ணகிக்கு அடையாளஞ்செய்தல்.

மரப்பெட்டி கொண்டுவந்து மன்னவனு ரேதுசெய்தார்
திருவிளக் கேற்றிவைத்தார் சீரான பெட்டியிலே
மாங்கனியும் மல்லிகைப்பூ வைத்தாராம் பெட்டியிலே
தேங்கனியுங் கொண்டுவந்து சீராக வைத்தாராம்
சந்தனத்தை வைத்தாராம் தானுரைத்துப் பெட்டியிலே
நான்-மதுரைக்குச் சென்று வருமளவு மங்கையரே
தேங்கா யுடையாது செம்புஜலங் குறையாது
மல்லிகைப்பூ வாடாது மாங்கனியு மழுகாது
சந்தன முலராது தைய விளங்கொடியே
மதுரைக்கு நான்சென்று வருமளவும் மங்கையரே
சுகமாய் வருவேனானல் தோகை யிளங்கொடியே
வைத்த அடையாளம் மாறாமல் தானிருக்கும்
மாண்டு மடிவேனானல் மங்கையரே நீர்கேளும்
திருவிளக்கு நின்றுவிடுந் தீய்ந்துவிடுஞ் சந்தனமும்
தேங்கா யுடைந்துவிடும் செம்புஜலந் தான்குறையும்
மாங்கனி யழுகிவிடும் மல்லிகைப்பூ வாடிவிடும்

பிளந்து இருபிளவாய்ப் பெட்டி யுடைந்துவிடும்
இதுதா னடையாளம் ஏந்திழையே உன்தனுக்கு
மதுரைக்கு நான்போக மனதில்லை என்றுசொல்லி
சிலம்பெடுத்துத் தோளில்வைத்துச் செட்டிபிள்ளை கோவிலனார்

## கோவிலர் வீடுவிட்டு வரும்போது துற்குறி காணுதல்.

அப்போ-பல்லி பலபலென்னும் பனைமரத்தி லாந்தைசீறும்
மனையைவிட்டு வெளியில்வர வாசற்படி தலையிற்றட்ட
தலைவாசல் வருகையிலே தலைப்பாகை தவறிவிழும்
அந்தச் சகுனம்விட்டு ஆணழகர் வெளியில்வந்தார்
குட்டியிட்ட கரும்பூனை குறுக்காக வந்ததங்கே
அந்தச் சகுனந்தப்பி அப்பாலே வாருரே
எரிமுட்டை தலைமொட்டை யெதிரில்வரக் கண்டாராம்
ஓரி குறுக்காச்சு ஒற்றைப்பார்ப்பா னெதிரானன்
வாழாக் குமரியவள் மீளா நெருப்பெடுத்தாள்
எண்ணெய்க் குடமெடுத்து எதிரில்வரக் கண்டாராம்
ஏணியுஞ் சாணனும் எதிரில்வரக் கண்டாராம்
கட்டோலை கைபிடித்துக் கணக்கன்வரக் கண்டாராம்
ஆண்கோட்டான் பெண்கோட்டா னலறியழக் கண்டாராம்
அசரீரி வாக்காக ஆரணங்கு புலம்புகிருள்
கைம்பெண் பறைச்சியவள் கதறியழக் கண்டாராம்
மதுரைக்குப் போகாதே மாண்டு மடியாதே
தென்மதுரை போகாதே செத்து மடியாதே
என்றுசொல்லி அப்பறைச்சி நின்று புலம்புகிருள்
ஒற்றைக் குரலிட்டு ஓங்கி யழுகிருளே
அத்தனையுந் தள்ளிவிட்டு ஆணழகர் வாருரே
மதுரையைத் தான்தேடி வருகின்ற வேளையிலே
மதுராபுரி பட்டணத்தை மன்னவருங் கண்டுவிட்டார்
இப்பெரிய மதுரையிலே யென்சிலம்பை விற்கவேண்டும்
என்று-மதுரைக்குள் ளாகவேதான் வடிவழகன் போய்நுழைந்தான்
அரண்மனைக ளாஸ்தான மாணழகர் கண்டுவிட்டார்

கோட்டைகளுங் கொத்தளமுங் கோவிலனுர் கண்டுவிட்டார்
நாலுபக்கந் தென்மதுரை நடுவில்பிள்ளை யார்கோயில்
கோவிலின் முன்பாகக் கோவிலனுர் வந்துநின்றூர்
மாதுகாற் சிலம்பதனை மதுரையிலே விற்றூலே
தேரடியுந் தூணுந்தங்கத் தேர்க்கலசந் தானுந்தங்கம்
வண்டி யுருளைதங்கம் வாகனமுந் தான்தங்கம்
செங்கல்லால் கோவில்தனைக் கருங்கல்லால் கட்டிவைப்பேன்
நெருங்குகின்ற வீதியிலே நெடுங்காத மோட்டிவைப்பேன்
அபிஷேகஞ் செய்வதற்கு அபரஞ்சி தானளிப்பேன்
இப்படிக்குப் பிரார்த்தனைகள் செய்தாரே கோவிலனுர்
சிந்தாமணி தாசிவீதி செட்டிபிள்ளை வாருரே

## கோவிலன் சிலம்புவிலை கூறிவருதல்.

சிலம்போ சிலம்பென்று தெருவீதி சுற்றிவாருர்
தென்மதுரை வீதியெங்கும் சிலம்புவிலை கூறுகிறுர்
ஏற்ற விலைகொடுத்து இச்சிலம்பைக் கொள்வாருண்டோ
பச்சைச் சிலம்புதனைப் பாருலகிற் கொள்வாருண்டோ
மெச்சும்பசும் பொன்சிலம்பை விலைகொடுத்து வாங்குவீரோ
உத்தமியாள் காற்சிலம்பை ஒண்டொடியீர் வாங்குவீரோ
பத்தினியாள் காற்சிலம்பைப் பாவையரே வாங்குவீரோ
தென்மதுரைப் பெண்காள் விலைதெரிந்திது வாங்குவீரோ
மேன்மதுரைப் பெண்காள் விலைதெரிந்திது வாங்குவீரோ
வில்லாச் சிலம்புதனை விலைகூறி வந்தேனென்று
வீசி நடந்தாரே வீதிவழி கோவிலரும்
மனையில்வெள் ளானைகட்டி வாழ்ந்தது போதும்போதும்
வேசி மருந்தாலே வெந்துநொந் ததும்போதும்
தாசி மருந்தாலே தான்வாழ்ந் ததும்போதும்
மூவா யிரங்கப்பல் முங்கியே போனதினுல்
கப்பல்மூ வாயிரமுங் கரைதட்டிப் போனதினுல்
வர்த்தகந் தட்டினதால் மதுரையில் சிலம்புகொண்டு

தெருவில்விலை கூறிவந்தேன் சிலம்புதனைக் கொள்வீரோ
என்று-இப்படியாய்க் கோவிலரு மின்பமுடன் கூறிவாரூர்
கூறியே வாரூரே கோவிலச் செட்டியாரும்
சிந்தாமணி தாசியவள் தேன்மொழியா ளோடிவந்து
வர்த்தகரை யவள்பார்த்து வாருமென்று தானழைத்தாள்
வாருமென்று தானழைக்க வாரூரே கோவிலரும்
மாளிகைக் குள்ளாக வந்துநின்றூர் கோவிலரும்
சிலம்புதான் தாருமென்று தேன்மொழியாள் கேட்டாளே
எடுத்துக் கொடுக்கவே எடுத்தாராங் கோவிலரும்
வாய்விட் டழுகுதங்கே மயிலனையாள் பொற்சிலம்பு
பத்தினியாள் காற்சிலம்பு பரஸ்திரீக் கேற்காது
உத்தமியாள் காற்சிலம்பு உன்தனுக்கு ஏற்காது
வாய்விட் டழுகுதங்கே மயிலனையாள் காற்சிலம்பு
எடுத்துநீர் காட்டுமென்றூள் ஏந்திழையாள் சிந்தாமணி
இந்தச் சிலம்புமே என்தனுக்கு ஏற்காது
ஆரார் போடவேணும் ஆரணங்கு காற்சிலம்பை
மீனாட்சி போடவேணும் மிக்கசொக்கர் பார்க்கவேணும்
வள்ளியவள் போடவேணும் வடிவேலர் பார்க்கவேணும்
பார்வதி போடவேணும் பரமசிவன் பார்க்கவேணும்
திருமாது போடவேணும் திருமாலும் பார்க்கவேணும்
இந்தச் சிலம்புமே என்தனுக்கு ஏற்காது
எடுத்துமெள்ள கட்டுமென்றூ ளேந்திழையா ளப்போது
ஆணைமேற் பணம்போட்டு அனுப்புவே னுந்தனுக்கு
இந்தச் சிலம்பெடுத்து ஏகுவீ ராரண்மனைக்கு
என்றந்தச் சிந்தாமணி யெடுத்துரைக்கக் கோவிலரும்
தாசியவள் நீகொடுக்கத் தனவணிகன் வாங்குவேனே
ஆர்போட வேணுமோ அவர்களதைப் பார்க்கவேணும்
அவளரண் மனையைவிட்டு ஆணழகர் வாரூரே
கோவிலிங்கி வீதிதன்னில் கோவிலனூர் வாரூரே
சிலம்போ சிலம்பென்று செட்டிபிள்ளை வாரூரே

## இராஜகன்னி சிலம்பு சொட்டையாகத் தட்டானிடத்தில் கொடுத்தது.

ராஜகன்னி தன்சிலம்பை நாயகியாள் முன்பொழுது
வஞ்சிபத்தன் கைதனில் மயிலனையாள் தான்கொடுத்தாள்
சொட்டை நிமிர்த்திக்கொண்டு வாவென்று சொன்னாளே
அவனெடுத்துக் கொண்டுபோ யரிவையுட காற்சிலம்பை
சொட்டை நிமிர்த்தியவன் வெண்காரந் தான்பூசி
ஆரைச் சுவர்மீதில் வைத்தானே வஞ்சிபத்தன்
வஞ்சிபத்தன் புறக்கடையில் புளிய மரத்தடியில்
கூண்டுகட்டிக் கருடனுமே குஞ்சுகள் தான்பொரித்து
குஞ்சுக் கிறைதேடப் போச்சுது கருடனது
அந்தச் சமயத்திலே ஆரணங்கு முத்துமாலை
அரைக்கீரை தானரிய வந்தாள் புறக்கடையில்
அதிலே யொருமுள்ளு அன்பாகத் தைத்துதங்கே
ஐயோ சிவனேயென்று அழுதுகொண்டு வீடுவந்தாள்
கருடனுக் கிடங்கொடுத்துக் காலுக் கிடராச்சு
என்றுசொல்லி அழுதுகொண்டு இருந்தாளே வீட்டினிலே
பள்ளிக்கூ டம்படித்துப் பாலகர்கள் வீடுவந்தார்
அப்போது முத்துமாலை அழுதுகொண்டு தானிருந்தாள்
அழுதுகொண் டிருக்கிறதை அவர்களும் பார்த்தார்கள்
ஏனம்மா அழுகின்றாயென்றுசொல்லிக் கேட்டார்கள்
கீரை யரியப்போனேன் காரைமுள்ளு தைத்ததப்பா
வேதனைக ளாச்சுதென்று விளம்பினாள் முத்துமாலை
அந்த விசேஷமது ஆணழகர் தாம்கேட்டு
அந்த மரத்திலே ஆணழகர் தானேறி
கருடனுட கூண்டைக் கலைத்துவிட்டார் பிள்ளைகளும்
கருடன்குஞ்சு முட்டைகளைக் கடுகவே தாமெடுத்து
கழுத்தை முறித்ததனைக் கடக்கவே விட்டெறிந்தார்
முட்டை தனையெடுத்து பொட்டெனவே தாமுடைத்தார்
அந்தச் சமயத்திலே அன்பான கருடனது

குஞ்சுக் கிரைதேடிக் கொப்பெனவே வந்ததங்கே
ஆரெடுத் தார்களென்று அழுதுகொண்டு பார்க்கையிலே
வஞ்சிபத்தன் தன்னுடைய மைந்தர்செய்த வேலையென்று
பழிக்குப் பழிவாங்கப் பார்த்தது கருடனது
காத்துக்கொண் டிருந்ததங்கே கனமான கருடனது
அப்போது வஞ்சிபத்தன் அவளுடைய செஞ்சிலம்பை
ராசகன்னி செஞ்சிலம்பை நலமாகக் காயவைத்தார்

## கருடனது முட்டை யுடைத்தபடியால் அது சிலம்பு கொண்டுபோவது.

இதுதான் சமயமென்று இன்பமுடன் கெருடனது
காலாலே கவ்விக்கொண்டு கடுக வருகுதங்கே
ஏழுகட லுக்கப்பால் இருக்குமொரு நாகமது
ஆயிரங் கண்ணிபுத்து ஐந்துதலை நாகமது
ஐந்துதலை நாகமிடம் அவள்சிலம்பை ஒப்பிவைக்க
பாம்பதுவும் பத்திரமாய்ப் பாங்காக வைத்ததங்கே
இப்படிக்குத் தானிருக்க இன்பமுட னந்நேரம்
ராசகன்னி கோவிலிங்கி நற்சிலம்பைக் கேட்கலுற்றாள்
வஞ்சிபத்த னையழைத்து மணிசிலம்பைக் கேட்கலுற்றாள்
தாறேன் தாறேனென்று தட்டானுஞ் சொல்லலுற்றான்
அந்நேர வேளையிலே ஆறுயிரம் பாண்டியர்கள்

## பாண்டியர்கள் வஞ்சிபத்தனைக் கண்டிக்கிறது.

வஞ்சிநல்ல பத்தன்தன்னை வரவழைத்தா ரப்பொழுது
சீக்கிரமா யித்தினத்திற் சிலம்புதந்தா லாச்சுதுகாண்
எங்கேயிருந் தாலுமதை யெடுத்து வராவிடிலோ
நாளையத் தினத்திலே நலமாக வுன்தனைத்தான்
ஆனையின் காலாலே அஞ்சா திடறிடுவோம்
என்றுமிகத் தீர்ப்பு இன்பமுடன் கொடுத்தார்
அப்போது வஞ்சிபத்தன் அவ்வார்த்தை தான்கேட்டு
அரண்மனைக் குள்ளாக ஆணழகன் தானும்வந்து

மனையாளைத் தானழைத்து வஞ்சிபத்த னேதுரைப்பான்
என்னடி பெண்ணேநீ யிளங்கொடியே முத்துமாலை
அந்த-செஞ்சிலம்பு தன்னாலே தீம்புவந்து நேர்ந்ததடி
நாளைய தினத்திலே நலமாகப் பாண்டியர்கள்
ஆனையின் காலாலே ஆணழகர் கொல்வோமென்றார்
நீ-மஞ்ச ளிழந்தாய் மணமிழந்தாய் பூவிழந்தாய்
இனி-என்ன சுகமென்று ஏந்திழையா ளுக்குரைத்தான்
தாலி யறுத்துமந்தத் தையலவள் விட்டெறிந்தாள்
இப்படிக்குத் தானிருக்க இன்பமுட னந்நேரம்
அந்தச் சமயத்தில் ஆணழகர் கோவிலனார்

## இராசகன்னி வீதிக்குக் கோவலர் சிலம்பு கூறிவந்தது.

சிலம்புவிற்று வாறாரே தென்மதுரை கோவிலரும்
ராசகன்னி வீதியிலே நலமாகக் கூறிவாறார்
சிலம்பென்று கூறிவாறார் செட்டிபிள்ளை கோவலனார்
மணிச்சிலம் பென்றுசொல்லி மணியழகர் கூறிவாறார்
பத்தினி காற்சிலம்பை பார்த்திதைக் கொள்வாருண்டோ
என்றுமவர் கூறையிலே ஏந்திழையாள் தான்கேட்டாள்
குரலோசை இவ்வழகு கொற்றவனா ரெவ்வழகோ
மணிக்குரலே'யிவ்வோசை மணியழக னெவ்வழகோ
சிலம்புவிற்கு மன்னவனைத் தேடி யழையுமென்றாள்
தாதிமா ரோடிவந்து தனஞ்சயரைத் தானழைத்தார்
அழைத்த குரல்கேட்டு ஆணழகர் வாறாரே
மூன்றும் படித்தளத்தில் வந்துநின்றார் கோவிலரும்
முத்துமனை தான்கொடுத்தார் மெத்தெனவே தாதியர்கள்
ராசகன்னி கோவிலிங்கி நலமா யெழுந்திருந்தாள்
முத்துத் திரைவளைத்து மெல்லி யிளங்கொடியாள்
வர்த்தகனைத் தான்பார்த்து மயிலனையாள் கேட்கலுற்றாள்
எந்தவூ ரெந்தநாடு எனக்கறியச் சொல்லுமென்றாள்
அப்போது கோவலனா ராணழக ரேதுசொல்வார்
கஞ்சிகொண்டு மதவடைக்குங் காவிரிப்பூம் நன்னாடு

காவிரிப்பூம் பட்டணத்துக் கரைதுறைக்கு வந்தார்கள்
மாநாய்கன் செட்டியென்றும் மாச்சோட்டான் செட்டியென்றும்
முத்துச்செட்டி பெற்றெடுத்த முடியரசன் கோவிலனும்
என்பேரோ கோவிலனும் என்கூத்தி மாதகியாள்
கூத்தியார் மாதகியாள் கொண்டவள்பேர் கண்ணகியாள்
தாசிகட னுக்காகத் தனிச்சிலம்பு நானெடுத்தேன்
வேசிகட னுக்காக மெல்லியுட சிலம்பெடுத்தேன்
மெல்லி சிலம்பெடுத்து மேன்மையுடன் விற்கவந்தேன்
என்று-சிலம்பெடுத்து ராஜருட தேவிகையிற் றான்கொடுத்தார்
ராசகன்னி வாங்கையிலே நலமாகப் பொற்சிலம்பு
அமிர்தஞ் சொரிகிறது ஆரணங்கு நாயகிக்கு
கண்ணீரைச் சோரவிட்டுக் கதறி யழுகிறாளே
தவமாய்த் தவமிருந்து தையலரைப் பெற்றெடுத்தேன்
வரமாய் வரமிருந்து வைகையிலே ஒப்படைத்தேன்
அன்றுகண் டேன்மகளே இன்றுகண் டேன்சிலம்பை
என்று-அழுது புலம்புகிறா ளாரணங்கு ராசகன்னி
கோவிலரைத் தான்பார்த்து கொம்பனையா ளேதுசொல்வாள்
பாம்பெடுத்து மேற்போடும் பழிகாரத் தென்மதுரை
இந்த மதுரையிலே இறந்துபோக நாளாச்சோ
ஆனையின்மேல் திரவியத்தை அனுப்புகிறே னும்மனைக்கு
அத்தை யெடுத்துமுந்த மரண்மனைக்குப் போய்ச்சேரும்
இந்தச் சிலம்பிதுதா னேற்காது என்தனுக்கு
நாகரத்னச் சிலம்பிதுதான் நாயகிக் கேற்காது
எடுத்துமெள்ளக் கட்டுமென்று ஏந்திழை தானுரைத்தாள்
அப்போது கோவிலனார் ஆணழகர் வாறாரே
ராசகன்னி வீடுவிட்டு நலமாக வாறாரே

## கோவிலர் வாத்தியாரைக் காணுதல்.

வேதவாத்தி பள்ளிக்கூடம் விதமாகத் தேடிவாறார்
அவரழகைத் தான்பார்த்து அந்தவாத்தி யாரெழுந்து
அட்டாளுஞ் சொக்கரென் றடிபணிந்து தெண்டனிட்டார்

சொக்கரல்ல சொக்கரல்ல சாதியிலே செட்டிப்பிள்ளை
கூத்திக் கடனுக்காகச் சிலம்பெடுத்து விற்கவந்தேன்
என்றுமவர் சொல்லையிலே இயலான வாத்தியாரும்
பள்ளிக்கூ டத்திலே பாங்காகக் குந்தவைத்தார்
பாலும் பழமுமவர் பாங்காகத் தான்கொடுத்து
பசியாறு மென்றுசொல்லிப் பசியிளப்பைத் தீர்த்துவிட்டார்
தாம்பூலந் தான்கொடுத்தார் தனஞ்சயனூர் கோவிலர்க்கு
தாம்பூலந் தரித்துக்கொண்டு தானிருந்தார் கோவிலரும்
அப்போது வாத்தியார் ஆணழக ரென்னசொல்வார்
பழிகார மதுரையிலே பட்டணத்தா ரேன்வந்தீர்
கொடும்பாவி மதுரையிலே கோவிலரே யேன்வந்தீர்
நிந்தையிட்டுத் தலைவாங்கும் நீதியில்லா மதுரையிது
அநீதமாய் மாளவந்தீ ராணழகர் கோவிலரே
காராம் பசுவைவிற்றுக் கட்டழகா வுந்தனுக்கு
கூத்தியார் கடனடைக்கக் கொற்றவரே நான்தாறேன்
அத்தை யெடுத்துமுந்த னரண்மனைக்குப் போய்வாரும்
என்ற-இவ்வார்த்தை தாம்கேட்டு எழுந்தாரே புண்ணியரும்
பள்ளிக்கூ டத்தைவிட்டு பாங்காகத் தாம்நடந்தார்
வஞ்சிபத் தன்பிள்ளைகள் வகையாகத் தாமெழுந்து
வாத்தியா ரைப்பார்த்து வகையுட னேதுசொல்வார்
ஒன்றுக்குப் போறோமென்று கேட்டார்கள் பசங்களங்கே
போங்களென் றனுப்பிவிட்டார் புகழான வாத்தியாரும்
அரண்மனையைத் தேடி ஆணழகர் வாறார்கள்
தாயுந் தகப்பனையுந் தாம்பார்த்து என்னசொல்வார்
சிலம்பை யெடுத்தொருவன் தென்மதுரை விற்கவந்தான்
கன்னல்வில் மாரனவன் காவிரிப்பூம் வர்த்தகனும்
சிலைபோல் வடிவழகன் செட்டிபிள்ளை கோவிலனும்
சிலம்புகொண்டு வாறானே செட்டிபிள்ளை கோவிலனும்
அவனை யனுப்புகிறேன் ஆணழகா வுன்னிடத்தில்
மூத்த தமையனவன் முதற்றமையன் பிள்ளையென்று
ஒப்பாரி கொண்டு உறவுகொண்டு நீயழைத்து

செஞ்சிலம்பைத் தான்பறித்துத் திருடனென் றிறுகக்கட்டி
ராஜர்முன்னே கொண்டுவந்தால் நலமாக வெட்டிடுவார்
நீ-தப்பிப் பிழைத்திடுவாய் தந்தையே யென்றுசொன்னார்
என்றவர்க்குச் சொல்லிவிட்டு இன்பமுட னோடிவாறார்
கோவிலரைக் கண்டு குழந்தைக ளென்னசொல்வார்
வஞ்சிபத்தன் வீதிக்கு மன்னவரே போவீரானால்
சீச்கிரமா யுந்தமக்குச் சிலம்புவிற்றுப் போகுமென்றார்
என்று மவர்சொல்லி இன்பமுடன் போனார்கள்

## கோவிலர் வஞ்சிபத்தன் வீதிக்கு வருதல்.

அப்போது கோவிலனார் அவ்வீதி வாறாராம்
மன்னன்சிலம் பென்றசத்தம் வஞ்சிபத்தன் செவிகேட்டு
திண்ணையை விட்டுமவன் திட்டென்று ஓடிவந்தான்
கட்டி யழுகிறானே கட்டழகன் கோவிலரை
மூத்த தமையனவன் முதற்றமையன் பிள்ளையப்பா
வாத்தியார் தாமடித்து வனவாசம் போனபிள்ளை
காடுபோன பிள்ளையப்பா வீடுவந்து சேர்ந்தாயென்று
ஒப்பாரி கொண்டுமே உறவுகொண்டு தானழைத்தான்
அவனுட மாளிகைக்கு அழைத்துப்போனான் வஞ்சிபத்தன்
வட்ட மணைபோட்டு வர்த்தகரைக் குந்தவைத்தான்
இளைப்பா யிருக்கிறீரே இளநீர் புசியுமென்றான்
பசியா யிருக்கிறீரே பாலமிர்தம் புசியுமென்றான்
போசனஞ் சமையுமென்றான் புண்ணியனார் கோவிலர்க்கு
அப்போது கோவிலனா ராணழக ரேதுசொல்வார்
சைவமடி மங்கையரே தைய விளங்கொடியே
உன்னுடைய மாளிகையி லுண்ணேனென்றார் கோவிலரும்
பத்தன்-தவலைசெம்பு தான்கொடுத்துத் தனஞ்சயனார் கோவிலர்க்கு
அமுதுபடி காய்கறிக ளன்பாக வையுமென்றான்
அப்படியே நல்லதென்று ஆணழகர் தாமெழுந்து
புறக்கடையில் நீரேகிப் புண்ணியரே கோவிலரே
சமையல்செய்து நீர்போசித்து தனஞ்சயரே வாருமென்றான்

அப்படியே நல்லதென்று ஆணழகர் தாமெழுந்து
காற்சிலம் பெடுக்கையிலே கண்டுவிட்டான் வஞ்சிபத்தன்
இந்தச் சிலம்பிதுதா னிங்கேவைத்துப் போமென்றான்

## கோவிலர் போசனஞ் செய்தல்.

சிலம்பையவன் கைக்கொடுத்து செட்டிபிள்ளை வாறாரே
போசனமும் காய்கறிகள் பொங்கிவைத்துக் கோவிலரும்
பூசை முடித்துக்கொண்டார் புண்ணியனார் கோவிலரும்
வாழை யிலைபோட்டு வட்டித்துக் கொண்டாராம்
காய்கறி பதார்த்தங்கள் கட்டழகர் வைத்துக்கொண்டு
போசன முண்டுபின்பு போகிறார் தாமெழுந்து
வஞ்சிபத்தன் முன்னாக வந்துநின்றார் கோவிலரும்
சிலம்பெனக்குத் தாருமெனச் செட்டிப்பிள்ளை கேட்கலுற்றார்

## வஞ்சிபத்தன் கோவிலரைக்கட்டி இராஜர் முன் கொண்டு வருதல்.

கம்பளிக் கயிறுதேடி கட்டி யுருட்டுமென்றான்
பலத்த கயிறுதேடிப் பக்குவமாய்க் கட்டினாராம்
மலட்டுலக்கை கொண்டுவந்து மண்டைமேலே தாணடித்தார்
உதிரம் பெருகுதுபா ருத்தமனார் கோவிலர்க்கு
சிலம்பை யவனெடுத்துச் செட்டியாரைக் கொண்டுவாறான்
ராஜருட கச்சேரிக்கு நலமாகக் கொண்டுவந்தான்
சொக்கரென் றெல்லவரும் சொல்லியே தெண்டனிட்டார்
அட்டாளுஞ் சொக்கரென அடிபணிந்து தெண்டனிட்டார்
அப்போது வஞ்சிபத்தன் ஆணழக னேதுசொல்வான்
சிலம்பெடுத்துப் போனதொரு திருடனைக் கொண்டுவந்தேன்
அவன்-காலில் விழுந்தீர்களே கனங்குலைந்த ராஜர்களே
என்ற-கம்மாளன் சொற்கேட்டுக் கலங்குறார் பாண்டியர்கள்
அப்போது சொக்கலிங்கம் ஆண்டவனா ரேதுசெய்வார்
வெண்ணீறு தானெடுத்து விமலருந் தூவிவிட்டார்
வஞ்சிபத்தன் சொற்கேட்டு மதிமயங்க வேண்டுமென்று

அட்டாளுஞ் சொக்கலிங்கம் ஐயரவர் தூவிவிட்டார்
அறிவுகெட்டு மதிகுலேந்து ஆணழகர் பாண்டியர்கள்
வஞ்சிபத்தன் சொல்லதனை மன்னவர்கள் கேட்கலுற்றார்
சிலம்புகொண்டு போனதொரு திருட னகப்பட்டான்
மணிச்சிலம்பு கொண்டுபோன மன்ன னகப்பட்டான்
எட்டுநாள் முன்பாக எடுத்துக்கொண்டு போனவன்தான்
ஆரைச் சுவர்மேலே காயவைத்த பொற்சிலம்பை
ஒட்டுப்பார்த் துளவிருந்து உங்கள் சிலம்பெடுத்து
கம்மாளன் வீதியிலே ஊசிவிற்க வந்தான்காண்
என்றுஇவன் சொல்லையிலே இயலான பாண்டியர்கள்
இக்கணமே அக்கரையாய் இழுத்துக்கொண்டு போய்நீங்கள்
காளியம்மன் கோவிலிலே கடுகப்பலி வாங்கிடுங்கள்
என்றுசொல்லப் பாண்டியர்கள் எல்லோருங் கேட்டிருக்க
அருகிருந்த மந்திரிகள் அப்போது தாம்கேட்டு
சபையைவிட்டுத் தாமெழுந்தார் சற்குண மந்திரிகள்
உத்யோகம் வேண்டாமென்று உத்தமர்கள் தாமெழுந்தார்
தேசத்தி லில்லாத தீர்ப்பது செய்தீரே
ஞாய மதைக்கேட்டு நலமாகத் தீர்ப்புசெய்யும்
ஆக்கினைகள் செய்யவேண்டாம் அழகான பாண்டியரே
இத்தீர்ப்பு ஏற்காது எங்களுக் கென்றுசொல்ல
அப்போது பாண்டியர்க ளமைச்சருக் கேதுரைப்பார்
திருடிய கோவிலர்க்குத் தீர்ப்புக் கொடுங்களென்றார்

## பாண்டியர்களுடைய மந்திரிகள் கோவிலரை விசாரித்தல்.

அப்போது கோவிலரை அமைச்சருந் தாமழைத்து
ஆருடைய திச்சிலம்பு ஆணழகா சொல்லுமென்றார்
என்னுடைய பொற்சிலம்பு என்றாராங் கோவிலரும்
கூத்தி கடனுக்காக கொடிமதுரை விற்கவந்தேன்
கள்ளன் திருடனென்று கட்டிக்கொண்டு வந்தானே
என்றுமே சொல்லி எடுத்துரைத்தார் கோவிலரும்
வஞ்சிபத்த னையழைத்து மந்திரிகள் கேட்கலுற்றார்

அப்போது வஞ்சிபத்த னமைச்சரைப்பார்த் தேதுரைப்பான்
ராஜகன்னி தான்கொடுத்த நற்சிலம் பென்றுசொன்னன்
அப்போது மந்திரிக ளாலோ சனைகள்பண்ணி
சேவகரைத் தாமழைத்து செஞ்சிலம்பு கைக்கொடுத்தார்
கோவிலிங்கி தன்னிடத்திற் கொண்டுபோய் நீங்களுந்தாம்
இச்சிலம்பு தன்னதென்றும் இல்லையென் றுரைப்பதுவும்
சேதி யிரண்டிலொன்று தெரிந்துவாருஞ் சேவகரே
என்ன-அப்படியே கொண்டுவந்தா ராணழகர் சேவகர்கள்
ராசகன்னி கைதனிலே நலமாகத் தந்தார்கள்
அப்போது ராசகன்னி அச்சிலம்பைப் பார்த்துரைப்பாள்
இது-ஆருடைய பொற்சிலம்போ அறியேனன் காவலரே
என்னதல்ல வென்றுசொல்லி எறிந்துவிட்டாள் ராசகன்னி
அப்போது காவலர்கள் அக்கணமே கொண்டுவந்து
மந்திரிகள் முன்பாக வைத்தார்கள் சேவகர்கள்
அவள்சிலம் பல்லவென்று ஆரணங்கு தானுரைத்தாள்
வர்த்தகன்கை யிற்கொடுத்து வணக்கமா யனுப்புமென்றாள்
மாதுசிலம் பையொளித்த வஞ்சிபத் தன்தனக்கு
ஆக்கினை செய்து அவனை யனுப்பச்சொன்னள்
என்று-இப்படிக்குச் சொன்னர்க ளியலான சேவகர்கள்
அப்போது மந்திரிக ளாணழகர் கோவிலரை
சிலம்பையவர் கைக்கொடுத்துச் சீக்கிரமா யேகுமென்றார்
வஞ்சிபத்தனைக் கொண்டுபோய் வதைசெய்து போடுமென்றார்
அப்போது வஞ்சிபத்தன் ஆணழக னேதுசொல்வான்
சத்தியஞ் செய்யவேண்டுந் தனஞ்சயரே என்றானும்
அப்போது மந்திரிகள் ஆலோசனைகள்செய்து
பாம்புப் பிடாரனையும் பாம்பெடுத்து வாருமென்றார்
அப்போ பிடாரர்களும் அரவுகளைக் கொண்டுவந்தார்
புதுக்குடத்தில் போட்டடைத்தார் பொட்டெனவே பாம்புகளை
மஞ்சள்சீலை கட்டினர்கள் மன்னவர்கள் பொற்குடத்தை
பொன்னரிசி போட்டார்கள் பொட்டெனவே பொற்குடத்தில்
அந்தக் குடத்திலே ஆணழகர் கோவிலரை

கைவிட் டெடுமென்றார் கட்டழகர் மந்திரிகள்
அப்போது கோவிலனார் ஆரை நினைக்கலுற்றார்
பத்தாத பத்தினியே பழுதுபடா ரத்தினமே
கற்பதுவும் மெய்யானால் காக்கவர வேண்டுமென்று
கண்ணகியைத் தானழைத்துக் கட்டகழர் கைபோட்டார்
பத்தினியைத் தானினைக்கப் பாம்புக ளும்பார்த்து
கொன்றாலே தோஷமெனக் குடத்துள் விலகிநிற்க
பொன்னரிசி தானெடுத்துப் புண்ணியனார் கைகொடுத்து
கழுத்தின்மே லேபடத்தை கௌவுதுபார் சர்ப்பமெல்லாம்
பொன்னரிசி யள்ளியந்தப் புண்ணியனார் சபையில்வைத்தார்
அப்போது மந்திரிக ளாணழக ரேதுசொல்வார்
இவன்பேரில் குற்றமில்லை என்றார்கள் மந்திரிகள்
அப்போது பாண்டியர்க ளடைவாக ஏதுசெய்தார்
இன்னமொரு சத்தியந்தா னின்பமுடன் செய்யச்சொன்னார்
வேங்கைசத் தியஞ்செய்ய வேண்டுமென்று சொன்னார்கள்
வேங்கைக்கா ரரையழைத்து வேங்கைகொண்டு வாருமென
அப்படியே வேங்கையவ ரன்பாகக் கொண்டுவந்தார்
போனிலே தானடைத்துப் புண்ணியனார் முன்னேவைத்தார்
கோவிலனைத் தானழைத்துக் கொற்றவர்க ளேதுசொல்வார்
உள்ளேபோ வென்றுசொல்லி தள்ளிவிட்டார் கோவிலனை
கண்ணகியைத் தானினைத்துக் கதறி யழுகையிலே
பாராது போலாகப் பார்த்ததுகாண் வேங்கையது
கோவிலனை அப்போது கொடிவேங்கை தள்ளிவிடும்
நெய்யிலே சத்தியந்தான் நேராகச் செய்யுமென்றார்
கொப்பரையில் நெய்காய்ச்சிக் கோவிலனைத் தள்ளிவிட்டார்
அதுக்கும் பிழைத்தெழுந்தா ராணழகர் கோவிலனார்
மழுவுகொண்டு காச்சியல்லோ மன்னவனார் கைக்கொடுத்தார்
என்னது சிலம்பென்று ஏந்தினார் மழுவதனை
மழுவுகொண்டு தானேந்தி வாறாராங் கோவிலரும்
மதுரைசொக்கர் கோவிலிலே வாசற்படி மீதில்வைத்தார்
மழுவுமது தானுருகி வாசற்படி யாச்சுதங்கே

அன்னேர வேளையிலே ஆணழகர் கோவிலரும்
ராஜ சபைக்குமுன்னே நலமாக வந்துநின்றார்
அப்போது பாண்டியர்க ளாக்கினைக ளேதுசொல்வார்
யானைநல்ல சத்தியந்தா னடைவாகச் செய்யுமென்றார்
மாரளவு பள்ளம்வெட்டி மன்னவரைத் தாமழைத்து
செவ்விளநீர் நாட்டிவைத்தார் செட்டிபிள்ளை சுத்திவர
பள்ளத்தில் குந்தவைத்துச் சாலெடுத்து மூடிவிட்டார்
ஆனையைத் துரத்தினர்க ளாணழகர் கோவிலர்மேல்
அப்போது கோவிலரு மழுது புலம்புகிறார்
ஆனையது கிட்டவந்து ஆணழகர் கோவிலரை
மண்ணைப் பறித்துமது மன்னவனைத் தானெடுத்து
மஸ்தகந் தனில்வைத்துக் கூத்துக்க ளாடுதங்கே
இவர்-ஆனையின் மேலேறி அங்குசக்கோல் கைபிடித்து
கோலம் வருகிறாரே கோவிலச் செட்டியாரும்
ராசகன்னி வீதியிலே நலமாய் வரும்பொழுது
அப்போது கோவிலிங்கி ஆரணங்கு தானெழுந்து
உப்பரிகை மேலேறி உத்தமியும் பார்க்கலுற்றாள்
பார்த்து அழுகலுற்றாள் பைங்கொடியாள் ராஜகன்னி
அந்தச் சமயத்திலே ஆறாயிரம் பாண்டியர்கள்
மேடைமேல் நின்றவர்கள் மெல்லியைக் கண்டுவிட்டார்
கோபம் வருகுதங்கே கொற்றவர்கள் பாண்டியர்க்கு
ஆனையின்மேல் வாறவனை அக்ஷணமே தானிறக்கி
பாசக் கயிறாலே பக்குவமாய்க் கட்டுமென்றார்
மழுவரச ரையழைத்து மன்னவனை வெட்டுமென்றார்
அப்போது கோவிலனார் ஆணழக ரேதுசொல்வார்
அநீதமாய் வெட்டச்சொன்னீா அழகான பாண்டியரே
ஒருவன் பழிக்குநாளை உலகம்பழி வாங்கிவைப்பாள்
மன்னன் பழிக்குநாளை மதுரைபழி வாங்கிவைப்பாள்
மதுரையைக் கொளுத்திடுவாள் மன்னரைக் கொன்றிடுவாள்
கண்ணகியாள் வந்தாலே கண்டதுண்டஞ் செய்திடுவாள்
என்றுமந்த கோவிலனு ரெடுத்துரைத்தா ரந்நேரம்

## கோவிலரை வெட்ட மழுவரசர் கொண்டுவருதல்.

அப்போது மழுவரசர் அன்பாகக் கொண்டுவாரார்
காளியம்மன் கோயில்முன்னே கடுகவே கொண்டுவந்தார்
கொண்டுவரும் மழுவரசர் கோவிலருக் கேதுசொல்வார்
வெட்ட மனமுமில்லை வீரியரே போய்விடுங்காண்
கொல்ல மனமுமில்லை கோவிலரே போய்விடுங்காண்
என்ன-அப்போது கோவிலரும் ஆணழக ரேதுசொல்வார்
செஞ்சிலம்பு கொண்டுவந்த திருடனென்று பெயராச்சு
என்னைக்-கொன்றுவிடு மென்றாராங் கோவிலரு மப்போது
மாட்டோமென்று பின்னிடைந்தார் மழுவரச ரேழுபேரும்
அந்தக் குளத்திலே ஆணழகர் போய்முழுகி
சொக்கரையும் அம்மனையும் தோத்தரித்தா ரப்பொழுது

## கோவிலருக்கு மீனாட்சிவந்து பூர்வக்கியானஞ் சொல்லுதல்.

அங்கயற்கண் மீனாட்சி ஆரணங்கு மப்போது
கோவிலர் முன்பாகக் கொடியிடையும் வந்துநின்றாள்
மீனாட்சி தன்னைக்கண்டு மெத்தவு மழுதாராம்
ஏனப்பா நீயழைத்தாய் என்மகனே கோவிலனே
சாதகமும் பொய்க்காது தலைவிதியுந் தப்பாது
என்னவரம் வேண்டும் என்னைநீ கேளுமென்றாள்
மாலையிட்டு மூலைவைத்தேன் மற்றொன்றும் நானறியேன்
கூறையிட்டு மூலைவைத்தேன் குறையொன்றும் நானறியேன்
வீணுக்கு மாலையிட்டு விருதாவாய் அறுக்கலானாள்
தாலிபறி போகுதம்மா தலைவனிங்கே மாளுகிறேன்
என்ற-இந்த வசனமுமே ஏந்திழையாள் தான்கேட்டு
அவளுனக்குத் தாயலவோ நீஅவட்குப் பிள்ளையல்லோ
வயதுபதி னாறுதன்னில் மாளவோ நீபிறந்தாய்
கற்பாறைக் கென்றுசொல்லிக் கட்டழகா நீவளர்த்தாய்
சாதகமுந் தப்பாது தலைவிதியும் பொய்யாது

வாணியன்நீ முன்பிறப்பில் மாதகியுன் பெண்சாதி
கண்ணகி காளியப்பா கட்டழகா அழுகாதே
ஒருவன் பழிக்குமவ ளுலகம்பழி வாங்கவந்தாள்
மைந்தன் பழிக்குமவள் மதுரைபழி வாங்கவந்தாள்
இப்படிக்குச் சொல்லையிலே ஏதுரைப்பார் கோவிலரும்
கயற்கண்ணி யம்பிகையே கண்ணகிமே லாணையிட்டேன்
ஆணை விடுதல்பண்ணும் ஆணழகி மீனாட்சி
ஆணைவிட்டேன் தோஷமில்லை யென்றாளே மீனாட்சி
செத்தாலுங் கயிலாயஞ் சிவன்பாதம் சேரவேண்டும்
உமையவளே மாதகியை உடன்கட்டை சேர்க்கவேண்டும்
நாயகி மாதகிக்கும் நற்பதவி கொடுக்கவேண்டும்
எனக்கு மவளுக்கும் இன்பமோட்சந் தரவேணும்
அப்படியே தந்தேனென்று ளருங்கிளியாள் மீனாட்சி
அப்போது மீனாட்சி யம்மனுந் தான்மறைந்தாள்
காளிகோயில் முன்பாகக் கட்டழகர் வந்துநின்று
மழுவரச னைப்பார்த்து வாருமென்று தானழைத்தார்
தன்னைவெட்டு மென்றுசொன்னார் தயவுடனே கோவிலரும்

## மழுவரசன் கோவிலரை வெட்டுகின்றது.

வாளெடுத்து வீசினார் மழுவரச ரப்போது
மாலையாய் விழுந்ததது வர்த்தகன் கழுத்திலேதான்
வாளையுங் கீழ்ப்போட்டு மன்னவர்க ளோடிவிட்டார்
அப்போது கோவிலனார் ஆணழக ரேதுசெய்தார்
கண்ணகி வருமளவுங் காத்திருங்க ளென்னுடலை
கற்பாரை தன்னைநீங்கள் கட்டழகா காத்திருங்கள்
இந்தச் சகாயமது என்தனுக்குச் செய்புமென்று
பத்தினியைத் தானினைந்து பாலாவுந் தானெடுத்தார்
அதை-உச்சி வழியிலே உத்தமன் தானும்வைத்தான்
பத்தினிநீ மெய்யானால் பாலாவு டுருகவேண்டும்
பத்தினியாள் பேரைச்சொல்லப் பக்குவமாய் உருகுதங்கே
ஒன்று யிருந்தவுடனிரண்டாய்ப் பிளந்துகொண்டார்

வாழைவெட்டி சாய்ந்ததுபோல் பாறைமேல் தாம்விழுந்தார்
சிறுகுடலும் பெருங்குடலுஞ் சிறந்தது பாறையின்மேல்
மாண்டு மடிந்தாரே வடிவழகர் கோவிலரும்
அஞ்சுபஞ்ச பூதங்களும் ஆரண்டை வருகுதங்கே
சொக்க ரிடத்திலேதான் பக்குவமாய்ச் சேர்ந்ததுகாண்
தங்கச் சிமிழ்தனிலே தானடைத்தார் சொக்கலிங்கம்
அப்போது மழுவரசர் ஆணழக ரேதுசெய்தார்
காகம் பறவாமல் கழுகுகள் தீண்டாமல்
கல்லாற் பரணைகட்டிக் காத்திருந்தா ரேழுபேரும்

## கோவில னுதிரத்தைச் சபையில் யாவரும் பொட்டிடுதல்.

அதிலே யொருவனவன் ஆணழக னோடிவந்தான்
பாண்டியர்கள் முன்னேவந்து பாங்காக வதுரைப்பான்
வாளும் உதிரங்களும் மன்னவர்க்குக் காட்டினனே
ஆளுக் கொருதிலதம் அரசர்களு மிட்டுக்கொண்டார்
வஞ்சிபத்த னோடிவந்து வாரிவாரித் தான்குடித்தான்
குடித்துத் தியாகம் கொடுமென்றான் பாண்டியரை
வஞ்சிபத்தா நீநாளை வாவென்றார் மன்னவர்கள்
அப்படியே சம்மதித்து அரண்மனைக்குப் போனார்காண்
வஞ்சிபத்தன் போனபின்பு மன்னவருந் தாமிருந்தார்

## மதுரையில் பாண்டியர்கள் துற்குறி காணுதல்.

அப்போ மதுரையிலே அவசகுனங் காணுதங்கே
கல்மழை பெய்யுதங்கே கனத்த மதுரையிலே
கோட்டை யிடியுதங்கே கொடிமரமுஞ் சாயுதங்கே
எட்டுசுத்து கோட்டைகளும் இடியுதுபார் மதுரையிலே
கழுதைக ளோலமிட்டுக் கதறி யழுகுதங்கே
அப்படி மதுரையிலே அவசகுனங் காணுதங்கே

## பாண்டியர்கள் பயந்து மதுரையில் திட்டஞ்செய்தல்.

அந்தச் சமயத்திலே ஆணழகர் பாண்டியர்கள்
நாலுகோட்டை வாசல்களும் நலமுடனே சாத்துமென்றார்

சாத்திக் கதவடைத்து தாள்பூட்டி வையுமென்றார்
அப்படியே செய்தார்க ளந்த மதுரையிலே
தண்டோரா போட்டாரே தனிமதுரைப் பட்டணத்தில்
என்னவென்று தண்டோரா போடுமென்றார் பாண்டியர்கள்
கோவிலனைக் கொன்றோமெனக் கொற்றவர்கள் சொன்னாலும்
கொன்றோமென்று யாராகிலும் கூட்டமாய்ப் பேசினாலும்
கைசாடை காட்டினாலும் கையைத் துணித்திடுவோம்
வாயாலே சொன்னாலும் வாயைக் கிழித்திடுவோம்
அண்டைவீ டசல்வீடு யாரொருவர் போனாலும்
அவர்கள் தலைதுண்டிப்போ மென்று தமுக்கறையும்
இப்படிக்கே சொல்லி தமுக்கறைந்தார் பட்டணத்தில்
மதுராபுரி பட்டணத்தில் மகாசனங்க ளத்தனையும்
சாத்திக் கதவடைத்துத் தாள்பூட்டி மண்ணறைந்தார்
தங்கள்தங்கள் மாளிகையைச் சாத்தி யவரிருந்தார்
இப்படிக் காக இருக்குமந்த வேளையிலே
வண்டியூர் பட்டணத்தில் வாழிடைச்சி தன்மனையில்
ஆச்சி யரண்மனையில் ஆரணங்கு கண்ணகியும்
பஞ்சணை மெத்தையிலே படுத்திருக்கும் வேளையிலே

## கண்ணகி சோப்பனங் காணுதல்.

அவள்-கண்ணயர்ந்த பிற்பாடு காணுகிறாள் சொப்பனங்கள்
மரப்பெட்டி யுடையக்கண்டாள் மல்லிகைப்பூ வாடக்கண்டாள்
ஏற்றிவைத்த திருவிளக்கு இருளடைந்து போகக்கண்டாள்
உரைத்துவைத்த சந்தனந்தான் உலர்ந் துதிரக்கண்டாள்
தேங்கா யுடையக்கண்டாள் செம்புசலங் குறையக்கண்டாள்
அட்டாளுஞ் சொக்கர்செயல் அம்மதுரை யிடியக்கண்டாள்
வாழ்மதுரைப் பட்டணத்து மதிலிடியக் கண்டாளே
உள்ளூரிற் றேரதுதான் உடையக்கண்டாள் கண்ணகியும்
அசலூர்த் தேரதுதா னச்சு முறியக்கண்டாள்
கொண்டை கலைந்துமவள் கொண்டைப்பூ வாடக்கண்டாள்
மாலை கசங்கியேதன் மணவாளன் மாளக்கண்டாள்

முந்நூறு.வேதியர்கள் முகூர்த்தமிட்ட மங்கிலியம்
நானூறு வேதியர்கள் நாளிட்ட மங்கிலியம்
கடகங் கழன்றுவிழக் கண்டாளே கண்ணகியும்
கோத்தமுத்துத் தாழ்வடமுங் கொலுசு முதிரக்கண்டாள்
வயிரமணி தானறுந்து வல்லார் பொறுக்கக்கண்டாள்
உட்கழுத்து வயிரமணி உருவிவிழக் கண்டாளே
மஞ்ச ளழியக்கண்டாள் மணமழிந்து போகக்கண்டாள்
தாலிபறி போகக்கண்டாள் தலைவணங்கே மாளக்கண்டாள்
மாலைபறி போகக்கண்டாள் மணவாளன் மாளக்கண்டாள்
காளியம்மன் கோயிலிலே கண்டதுண்டஞ் செய்யக்கண்டாள்
குலைவெட்டி சாய்ந்ததுபோல் கோவிலரும் சாயக்கண்டாள்
மரம்வெட்டி சாய்ந்ததுபோல் வர்த்தகரும் சாயக்கண்டாள்
பாதியுட லாகவெட்டிப் பாறைமேற் சாயக்கண்டாள்
அவர்-உதிரம் பலபலென உதிரம்வாய்ப் பூச்சொரிய
இரத்தம் பலபலென்ன இரத்தவாய்ப் பூச்சொரிய
சிறுகுடலும் பெருங்குடலும் சிதறிவிழக் கண்டாளே
மணிக்குடலும் பெருங்குடலும் மண்மேல் விழக்கண்டாள்
இப்படியாய் சொப்பனங்கள் ஏந்திழையுங் கண்டாளே
சொப்பனங் கண்டுமவள் துடிதுடித்துத் தானெழுந்தாள்
ஆச்சி முகம்பார்த்து ஆணழகி யேதுசொல்வாள்
மதுரைக்குப் போமிடத்தே மாண்டாரே என்கணவர்
சிலம்புவிற்கப் போமிடத்தே செத்து மடிந்துவிட்டார்
போன விடத்திலேதான் புருஷ ரிறந்தாரே
மாண்ட படுகளத்தில் மயிலனையாள் போகவேணும்
செத்த படுகளத்தை சீக்கிரம்போய்க் காணவேணும்
கொன்றவனைக் காணவேணும் கொடியபழி தீர்க்கவேணும்
மாண்டவரைக் காணவேணும் மன்னரைக் கொல்லவேணும்
ஒருவன் பழிக்காக உலகம்பழி வாங்கவேண்டும்
மன்னன் பழிக்காக மதுரைபழி வாங்கவேண்டும்
மார்க்கண்டம் துடிக்குதிங்கே மணவாளன் மாண்டிருக்க
அவருட படுகளத்துக் காச்சியரே போய்வாறேன்

செத்தபடு களம்பார்க்கத் தேவிநான் போய்வாறேன்
போக விடைகொடம்மா போய்வாறேன் தென்மதுரை
என்று எழுந்திருந்தா ளேந்திழையாள் கண்ணகியும்
ஆச்சியம்மாள் தான்பார்த்து அரிவையருக் கேதுரைப்பாள்
அடைக்கலமா யுன்னைவைத்து அணிமதுரை போனாரே
செஞ்சிலம்பை விற்பதற்குத் தென்மதுரை போனாரே
செஞ்சிலம்பை விற்றுக்கொண்டு செட்டியா ரிங்கேவந்து
கண்ணகியா ளெங்கேயென்று கட்டழகர் கேட்டாலே
அதற்கென்ன நானுரைப்பேன் ஆரணங்கு கண்ணகியே
நீபோற காரியத்தை நான்போ யறிந்துவாறேன்
மதுரைக்குப் போயறிந்து வாறேனென்றாள் வாழிடைச்சி
அவருடைய சேதிதனை அறிந்துகொண்டு வாறேனென்றாள்
புருஷனுட சேதியெல்லாம் போயறிந்து வாறேனென்றாள்
வீட்டி லிருமென்றாள் மெல்லி யிடைச்சியவள்
பட்டணத்துச் செட்டியாரைப் பார்த்து வருகிறேன்நான்
சீக்கிரம்போய் மதுரைதனிற் சேதி யறிந்துவாறேன்
என்றந்த ஆச்சிசொல்ல ஏதுசொல்வாள் கண்ணகியும்
அப்படியே போவாயானா லருஞ்சேதி சொல்லுகிறேன்
வெறும்பானை வெறுங்கூடை மெல்லியரே நீஎடுத்து
ஆற்றிலே தான்முழுகி அரிவையரே நீநினைத்தால்
நாலு அறையாகும் நலமான பானையிலே
நாலு அறைதனிலே நாலுவித முண்டாகும்
அதம விலைகூறி அநீதமாய் விற்றாயானால்
அவர்சேதி தான்தெரியும் ஆரணங்கே யுன்தனுக்கு
என்றந்தக் கண்ணகியும் எடுத்துரைத்தா ளாச்சியவட்கு
நல்லதென்று ஆச்சியவள் நலமாகச் சம்மதித்து
அப்படியே போவேனென்று ஆரணங்கு வாறாளே
தயிர்ப்பானை தானெடுத்துத் தையலரும் வாறாளே
ஆற்றில் முழுகினாளே ஆரணங்கு வாழிடைச்சி
பானை கழுவியவள் பக்குவமாய்க் காயவைத்து
நாலுகை ஜலமெடுத்து நங்கையரும் விட்டாளே

நாலு விதமாச்சு நங்கையுட கிருபையினால்
பால்மோர் தயிர்வெண்ணெய் பக்குவமாய்க் கைகுவித்து
பத்தினியா ளென்றுசொல்லிப் பக்குவமாய்க் கைகுவித்து
சிட்டுச் சிமிளெடுத்து சிம்மாடு கோலிவைத்தாள்
பால்கூடை தானெடுத்துப் பட்டணத்தே வாறாளே
மதுரைக்குள் ளாகவல்லோ மயிலனையாள் வாறாளே
நாலுகோட்டை வாசல்களும் நலமாகச் சாத்திருக்க
தெற்குநல்ல வாசலிலே தேன்மொழியும் வந்துநின்றாள்
அங்கிருக்கும் சேவகர்கள் ஆணழகர் தாம்பார்த்து
போற வழிமறைத்துப் போகாதே யென்றுசொன்னார்
அப்போதவள் தந்துசொல்லி ஆரணங் குள்நுழைந்தாள்
ஆதியந்த மும்மதுரை அடைப்பட் டிருக்குதுகாண்
கண்ணகியுஞ் சொன்னதுமெய் யென்றுமே யெண்ணியவள்
என்னவென்று கூவுகின்றா ளேந்திழைபாள் மதுரையிலே
ஒருபடி முத்தளந்தால் ஆறுழக்கு வெண்ணெயீவேன்
இரண்டுபடி முத்தளந்தா லிரண்டுழக்குப் பால்வார்ப்பேன்
மூன்றுபடி முத்தளந்தால் மூன்றுழக்கு மோர்வார்ப்பேன்
நாலுபடி முத்தளந்தால் நாலுழக்குத் தயிர்வார்ப்பேன்
கோனிச்சி யதமவிலை கூறியவள் வாறாளே
மதுரையி லுள்ளபெண்கள் வாறார்க ளெல்லவரும்
தயிர்பாலும் மோருங்கொள்ளத் தையலர்கள் வாறார்கள்
ஆச்சிமுன்னே வந்துமவ ளனைவோரும் நின்றார்கள்
அவரவர்கள் மனதின்படி யனைவோருங் கொண்டார்கள்

## இடைச்சி மதுரைக்குவந்து கோவிலர் சங்கதியறிதல்.

அதிலே யொருத்திதன்னை அன்பாகத் தானழைத்து
மதுரையி லுள்ளசேதி மர்மமெல்லாஞ் சொல்லுமென்றாள்
ஆரோ ஒருவனவன் அணிமதுரை தேடிவந்தான்
சிலம்புகொண்டு வந்தானுஞ் செட்டிபிள்ளை கோவிலனும்
சிலம்பைப் பறித்தவனை திருடனென்று கொன்றுவிட்டார்
மாண்டு மடிந்தானும் வடிவழகன் கோவிலனும்

மாண்டதின் பிற்பாடு மதுரைதனைச் சாத்திவிட்டார்
என்றுமவள் சேதிதனை எடுத்துரைத்தா ளாச்சியர்க்கு
அவ்வார்த்தை தான்கேட்டு அழுதுவாரு ளாட்டிடைச்சி
மதுரையை விட்டந்த மாட்டிடச்சி வாருளே
மாட்டுக்காரப் பிள்ளைகளை மயிலனையாள் தான்பார்த்து
செட்டியார் படுகளந்தா னெங்கேஎன்று தான்கேட்டாள்
காளியம்மன் கோயிலண்டை கண்டதுண்டஞ் செய்தார்கள்
திருப்பரங் குன்றங்காடு தெய்வகாளி கோயிலம்மா
வெங்கலப் பாறையிலே வெட்டிவைத்தார் கோவிலரை

## இடைச்சி கோவிலர் படுகளத்தைக் கண்டு புலம்பல்.

அவ்வசனங் தான்கேட்டு அழுதுகொண்டு வாருளே
படுகளத்தைத் தேடியல்லோ பாவையவள் வாருளே
மாண்டிருக்கும் படுகளத்தை தேன்மொழியாள் தான்பார்த்து
செத்திருக்கும் படுகளத்தைத் தேன்மொழியாள் தான்பார்த்து
தலைமாட்டில் வந்துநின்று தயிர்ப்பானை போட்டுடைத்தாள்
தயிர்ப்பானை போட்டுடைத்துத் தாவி யழுகலுற்றாள்
ஏண்டாவந்தா யென்மகனே ஈடழிவான் மதுரையிலே
அப்போதே சொன்னேனே ஆரணங்கு முன்தனக்கு
போகாதே யென்றேனே பூவைபேச்சைத் தள்ளிவந்தாய்
பேச்சைத்தள்ளி வந்திடத்தில் பிழைமோசம் வந்ததே
வார்த்தைதள்ளி வந்திடத்தில் வகைமோசம் வந்ததே
என்றுசொல்லி தானழுதாள் ஏந்திழைபாள் வாழ்விடைச்சி

## இடைச்சி அழுததினுல் அவளை ராசர்முன் கொண்டுவருதல்.

அழுத குரல்கேட்டு மழுவரச ரோடிவந்து
கட்டிக்கொண்டு வாருர்கள் கனமான ராசர்முன்னே
பாண்டியர்கள் தாம்பார்த்து பாவையருக் கேதுசொல்வார்
ஏண்டி யழுதாயென்று இனிதாகக் கேட்டார்கள்
கைபதறிப் பானைதன்னைக் கடுக வுடைத்துவிட்டேன்

பாலுக் கழுகவில்லை பாண்டியரே யென்றுரைத்தாள்
தயிருக் கழுகவில்லை தயிர்ப்பானை தனக்கழுதேன்
மோருக் கழுகவில்லை மோர்ப்பானை தனக்கழுதேன்
என்றுமவள் சொல்லையிலே ஏதுசொல்வார் பாண்டியர்கள்
வையகங்க ளத்தனையும் மண்பானை விலைபெறுமா
மூவுலக மத்தனையும் மோர்பானை விலைபெறுமா
ஏதுக் கழுதாயடி யிடைச்சிநீ யென்றுசொன்னர்
அப்போது வாழ்விடைச்சி அரசர்களுக் கேதுசொல்வாள்
மண்டைதுள்ளிப் போகாதே மட்டடக்க வருவாள்நாளை
ஆண்மைகொண்டு துள்ளாதே அகமடக்க வருவாள்நாளை
என்றுமிகச் சொன்னளே ஏந்திழையாள் வாழ்விடைச்சி
மண்ணைவாரித் தூற்றிவிட்டு வாருளே வாழ்விடைச்சி

## இடைச்சி கண்ணகிக்கு மனங்தேற பலசரக்கு கோண்டேவருகுதல்.

சின்னக்கடை பாதைதேடி தேன்மொழியாள் வாருளே
கண்ணகிக்கு வேண்டுமென்று என்னென்ன வாங்கலுற்ருள்
கோடி புடவையொன்று கொம்பனையாள் வாங்கலுற்ருள்
கம்பியுடன் கொடிச்சீலை கண்ணகிக்கு வாங்கலுற்ருள்
பாக்குப்பை மஞ்சள்களும் பத்தினிக்கு வாங்கலுற்ருள்
சீப்புசிக் கங்கோலும் தேன்மொழிக்கு வாங்கலுற்ருள்
மல்லிகைப் புஷ்பமது மயிலனைக்கு வாங்கலுற்ருள்
மாங்கனியுந் தேங்கனியும் மயிலனைக்கு வாங்கலுற்ருள்
நல்லெண்ணெய் சீக்காயும் நாயகிக்கு வாங்கலுற்ருள்
மஞ்சள் மருக்கொழுந்து மாதினுக்கு வாங்கலுற்ருள்
இத்தனையும் வாங்கிக்கொண்டு ஏந்திழையும் வாருளே
வண்டியூர் தான்தேடி வாழ்விடைச்சி வாருளே
அந்தச் சமயத்தில் அருங்கிளியாள் கண்ணகியும்
அடுக்காய்ச் சமையல்செய்து ஆரணங்கு மூடிவைத்து
வரும்வழியைப் பார்த்திருந்தாள் மயிலனையாள் கண்ணகியும்
அந்தச் சமயத்திலே ஆச்சியம்மை வந்துவிட்டாள்

தலைக்கடையி லுட்கார்ந்தாள் தைய லிடைச்சியவள்
கண்ணகியாள் முன்னேவந்து காரிகையா ளேதுரைப்பாள்
மதுரைக்குப் போனாயே வர்த்தகர் சேதியென்ன
தென்மதுரை போனதொரு சேதியென்ன செப்புமென்றாள்
வடிவழகர் சேதியென்ன மடிந்தாரோ பெண்கணவர்
தெரியவே சொல்லுமென்றாள் தேன்மொழி கண்ணகியும்
அப்போது வாழ்விடைச்சி அருங்கிளிக் கேதுசொல்வாள்
மதுரைக்குப் போனதொரு வர்த்தகனைக் கண்டுவந்தேன்
தென்மதுரை போனபின்பு செட்டியாரைக் கண்டுவந்தேன்
கண்டுவந்தே னென்றுமந்தக் கட்டழகி தானுரைத்தாள்
என்னசொன்னா ரென்கணவ ரெனக்கறியக் கூறுமென்றாள்
கோடிப் புடவையிது கொற்றவரை கேட்டாயாம்நீ
வாங்கிக் கொடுத்தாரே வடிவழகர் கோவிலரும்
பாக்குமஞ்சள் வெற்றிலையும் பாவையரே கேட்டையாம்நீ
அதுவுங் கொடுத்தார்காண் ஆணழகர் கோவிலர்க்கு
நல்லெண்ணெய் சீக்காயும் நலமாகத் தான்கொடுத்தார்
இத்தனையுங் கொடுத்தா ரென்றுரைத்தா ளாச்சியம்மாள்
கண்ட வுடனேயவள் கதறி யழுகிறாளே
மாலையிட்ட நாள்முதலாய் வாங்கிக் கொடுத்ததில்லை
செத்ததின் பிற்பாடு சீரனுப்பி வைத்தாரோ
ஆருக்கு ஏற்குமது ஆரணங்கு மாதகிக்கு
அவளுக்கு ஏற்குமது அடியாளுக் கேற்காதென்றாள்
புருஷன் படுகளமே போறேனென்று தானெழுந்தாள்
மாளவில்லை யுன்கணவன் மயிலனையே கண்ணகியே
என்றுசொல்லி வாழ்விடைச்சி ஏந்திழையைத் தேற்றியபின்
சாதத்தைப் போட்டுத் தையலரைச் சாப்பிடென்றாள்
இவள்-பிடித்த பிடிசாதம் புழுவாய்ச் சொரியுதங்கே
அப்போது கண்ணகியாள் ஆரணங் கேதுசொல்வாள்
மாண்டது மெய்தான்காண் வடமதுரைப் பட்டணத்தில்
என்றுமிவள் சொல்ல ஏந்திழையா ளென்னசொல்வாள்
பாலாகிலுங் குடித்துப் பசியாறு.மென்றுசொல்லி

செம்பிலே நற்பாலும் சேயிழைக்குத் தான்கொடுத்தாள்
செம்பில்வைத்த நற்பாலுஞ் சீழும்ரத்த மாச்சுதப்போ
கண்ணகியுந் தான்பார்த்துக் கன்னி மனமும்நொந்து

## கண்ணகி இடைச்சிவீட்டைக் கோபத்தினல் கொளுத்தி விட்டது.

அப்போது கண்ணகியா ளாரணங்கு தான்பார்த்து
எனக்குப்பொய் சொன்னவிந்த இடைச்சிவீடு வேகவேண்டும்
என்று-கைமுறித்து சாபமிட்டாள் கட்டழகி கண்ணகியாள்
கலந்துபற்றி யெரியுதங்கே கட்டழகி வீடதுதான்
வெந்து தணிகிறது வாழ்விடைச்சி வீடுமங்கே
அப்போது வாழ்விடைச்சி அலறிக்கொண்டு ஓடிவந்தாள்
கண்ணகி காலிலே கடுகெனவே போய்விழுந்தாள்
பத்தாத பத்தினியே பழுதுபடா ரத்தினமே
குடியிருந்த வீட்டிலே கொள்ளிவைக்க ஞாயமுண்டோ
உண்மையைச் சொல்லுகிறே னுத்தமியே யுன்தனக்கு
செத்தழிந்து போனரே செட்டிபிள்ளை கோவிலனர்
மாண்டது மெய்தான்காண் மயிலனையே கண்ணகியே
ஆறுதப்பு நூறுபிழை அடியாள்செய்த அபசாரம்
கோடிதப்பு மனம்பொறுத்துக் கொண்டணைக்க வேணுமம்மா
என்ன-அப்போது கண்ணகியாள் அவள்மேல் மனதிரங்க

## கண்ணகி இடைச்சிவீட்டை உண்டுபண்ணி மதுரைக்கு வருதல்.

எப்போதும் போலேயந்த இடைச்சிவீடு வுண்டாச்சு
கூந்தல் விரித்தாளே கொம்பனையாள் கண்ணகியும்
எல்லோர்க்குங் கூந்தலது இருபாக மொருபாகம்
ஆரணங்கு கண்ணகிக்கு அறுபத்து மூன்றுபாகம்
அறுபத்து மூன்றுபாகம் அழகுள்ள பொற்கூந்தல்
கூந்தல் விரித்துக் கொடியிடையாள் வாருளே
கணவன் படுகளத்தே கண்ணகியும் வாருளே

காடு செடிதாண்டி கடுகெனவே வாருளே
சில்லென்ற காடுஞ் செடியும் வனந்தாண்ட
காரைமுள்ளுஞ் சூரைமுள்ளுங் கடுகெனவே தைக்குதுபார்
சூரைமுள்ளுங் காரைமுள்ளுந் தொடையுருகப் பாயுதுபார்
துரட்டிமுள்ளு தைக்குதுபார் துணியைக் கிழிக்குதுபார்
செடிக்கொரு மயிரதுதான் சிக்குப்பட்டு வாருளே
ஐயோ சிவனேயென்று அழுதுகொண்டு வாருளே
கொக்குக் குருவிகளா கோவிலரைக் கண்டதுண்டோ
காட்டானை புலியினமே கண்டதுண்டோ கோவிலரை
சிங்கங் கரடிகளே செட்டியாரைக் கண்டதுண்டே
செக்கச் சிவந்தழகர் செங்கீரைத் தண்டழகர்
பார்க்க வழகுடையார் பாக்குமிகத் தின்பவர்காண்
செஞ்சிலம்பு கொண்டுவந்த செட்டியாரைக் கண்டதுண்டோ
என்ன-அங்கிருக்கு மிருகமெல்லாம் அரிவையருக் கேதுரைக்கும்
போறபோது கண்டதுண்டு வரும்போது கண்டதில்லே
என்றுசொல்லக் கண்ணகியும் ஏதுரைப்பா ளப்போது
போம்போது நான்சொன்னேன் போகேல் மதுரையென்று
வார்த்தைதள்ளிப் போனதினல் வகைமோசம் வந்ததுவே
பேச்சுதள்ளிப் போனதினல் பிழைமோசம் வந்ததுவே
செத்த படுகளந்தான் தேன்மொழியாள் நானறியேன்
நீர்-மாண்ட படுகளந்தான் மயிலனையாள் நானறியேன்
மாட்டுக்காரப் பிள்ளைகளை மாதுநல்லாள் கண்டுவிட்டாள்
மாடுமேய்க்கும் பிள்ளைகளா மாட்டாங்கோல் தம்பிமாரே
ஆளன் படுகளத்தை அரிவையெற்குச் சொல்லுமென்ருள்
புருஷன் படுகளத்தைப் பொற்கொடிக்குச் சொல்லுமென
என்னத்துக் காகக்கேட்டீர் இளங்கொடியே தானுரையும்
மதுரையைத் தான்கொளுத்த மயிலனையாள் போறேனென
நெருப்புகொண்டு போறீரோ நேரான தென்மதுரை
வாயாலே சொன்னலே மதுரையது வெந்துவிடும்
என்ன-அப்போது பிள்ளைகளும் அருங்கிளிக் கேதுசொல்வார்
இளைப்பா யிருக்குது எங்களுக்கு யேந்திழையே

பசியிளப்பைத் தீர்த்தாலே படுகளத்தைச் சொல்லுகிறோம்
என்ன-அப்போது கண்ணகியாள் அரிவையவ ளேதுசொல்வாள்
எப்படிக்குச் சாதம்நான் இதமாய்ப் புசிக்கக்கொடுப்பேன்
எப்படிக்குத் தென்மதுரை இனிதாய்க் கொளுத்துவாயோ
அப்படிக்குச் சாதமது அடைவாய்ச் சமையுமென்றாள்
அப்போது கண்ணகியா ளாரணங்கு தான்பார்த்து

## கண்ணகி மாட்டுக்காரப் பிள்ளைகளுக்குச் சாப்பாடிடுதல்.

பத்தினி சொரூபத்தை பசங்களுக்குக் காட்டவென்று
ஆற்று மணலெடுத்து அரிசியா யுண்டுபண்ணி
காய்கறிக ளுண்டுபண்ணாள் கன்னி யிளங்கொடியாள்
பானைசட்டி யுண்டுபண்ணாள் பாவையவ ளப்போது
காய்கறி பதார்த்தங்கள் கட்டழகி தான்சமைத்தாள்
இலைபறித்து வாங்களென் றேந்திழையாள் சொன்னாளே
வடதாரி தானுருவி மடிதனிலே கட்டிக்கொண்டு
ஆளுக் கொருகலப்பை அவர்களெடுத்துவந்து
மாதுகன்னி கையின்முன்னே வைத்தார்கள் பாலரெல்லாம்
இதுதானோ இலையென்று ஏந்திழையாள் கேட்கலுற்றாள்
இதைவிட வேறெயிலை யில்லையென்று தானுரைத்தார்
ஈர்க்கு எங்கேயென்று இளங்கொடியாள் கேட்கலுற்றாள்
கலப்பையை முன்னேவைத்தார் கட்டழக ரப்போது
பத்தினியாள் தான்பார்த்துப் பாவையரு மேதுசொல்வாள்
கைகா லலம்பிக்கொண்டு கட்டழகர் வாங்களென்றாள்
மடியி லிலைகளெல்லாம் வகையாகப் பரப்பிக்கொள்ளும்
அப்படியே பரப்பிக்கொண்டா ரந்தநல்ல பிள்ளைகள்தாம்
உத்தமியு மெய்யானு லொன்றாயிலை யாகவேண்டும்
என்று-கண்ணகியாள் சொல்லையிலே கலந்த திலைகளெல்லாம்
சாதங் கறிவகைகள் சட்டமாய் வடித்தாளே
போசன முண்டுமவர் புண்ணியனூர் தாமெழுந்தார்
இப்போவா கிலுஞ்சொல்லு மென்கணவன் படுகளத்தை

பல்காரந் தந்தாலே பக்குவமாய்ச் சொல்வோமென்றார்
ஆற்று மணலெடுத்து ஆளுக்கொரு பிடிகொடுத்தாள்
அவளுடைய சத்தியந்தான் அவலுங் கடலையாச்சு
அப்போது பிள்ளைகளும் அன்பாகத் தாம்பயந்து
செம்பருந்துங் கரும்பருந்துஞ் சேர்ந்து பறக்குதங்கே
மாமரச் சோலைகளும் வடபத்திர காளிகோயில்
திருப்பரங் குன்றக்காடு தெய்வகாளி கோயிலண்டை
அக்கடல் சகடப்பாறை அச்சமில்லா தச்சகொம்பு
உப்பகொண்டாள் பாதையது உயர்ந்த மலைகளவை
இரணிபுத்து பரணியின்மே லிருபிளவாய்ச் செய்தார்கள்
இருபிளவாய்ச் செய்திடத்தில் மறுபிளவாய்ச் செய்தார்கள்
தோற்றுது படுகளம் தோகையரே பாருமென்றார்
அவ்வார்த்தை தான்கேட்டு அலறிக்கொண்டு வாருளே
காட்டேறி துர்க்கையைப்போல் கன்னியவள் வாருளே
தலைவிரித்துக் கொண்டுமவள் தார்குழலாள் வாருளே
கண்ணகி வருகிறதைக் கண்டார் மழுவரசர்
பரணைவிட்டுக் கீழிறங்கிப் பக்குவமா யோடிவாருர்
அந்தச் சமயத்திலே அருங்கிளியாள் வந்துவிட்டாள்

## கண்ணகி தன்புருஷனை படுகளத்தில் கண்டு புலம்பல்.

கண்ணாலே கண்டாளே கண்ணகியாள் கோவிலனை
ஐயோ சிவனேயென்று அறைந்தாளே மார்தனிலே
தக்கோலந் தின்றதொரு தனிவாயை முத்தமிட்டாள்
கற்பூரந் தின்றதொரு கனிவாயை முத்தமிட்டாள்
வெற்றிலை போட்டதொரு வெள்வாயை முத்தமிட்டாள்
முத்தங் கொடுத்துமவள் மோதி யழுவாளாம்
சுத்தி வருவாளாம் சுழன்று வருவாளாம்
மடிந்தீரோ மன்னுவென்று மாரடித்துக் கொள்வாளாம்
செத்து மடிந்தீரோவென்று சேர்த்துமுத்த மிடுவாளாம்
பக்கத்தில் நின்றுமவள் பறந்துமா ரடிப்பாளாம்
இப்படியாக இளங்கொடியாள் தானழுதாள்

பாறைக்கிரை யென்றுசொல்லிப் பட்டணத்தில் நீர்வளந்தீர்
கற்பாறைக் கென்றுசொல்லிக் கட்டழகா நீர்வளர்ந்தீர்
பாறை யுறுத்தலேயோ பட்டணத்தார் கோவிலரே
கற்பாறை யுறுத்தலேயோ கட்டழகா வுந்தமக்கு
மாதகியாள் பஞ்சணையில் மயிரிருந்து வுறுத்துதென்று
கட்டிவைத்துத் தானடித்தீர் கனவணிக வர்த்தகரே
பொற்பாறை யுறுத்தலேயோ புண்ணியரே யுந்தமக்கு
நீர்-மாள வயதலவே மாண்டிருக்க நாளலவே
சின்ன வயதிலே செத்திறக்க நாளலவே
பார்த்தாற் பிராயமது பதினாறுக் குள்ளாகும்
எண்ணப் பிராயமது இருபதுக் குள்ளாகும்
இந்த வயதுதனி லினிமாள நீதியுண்டோ
அஞ்சு வயதுதனி லறியாத நாளையிலே
மாலையிட்டு மூலைவைத்து மாதகியாள் வீடுவந்தீர்
கூறையிட்டு மூலைவைத்துக் கூத்தியிடம் போய்ச்சேர்ந்தீர்
பன்னிரண்டு தன்வருஷம் பரஸ்திரீ வீடிருந்தீர்
அவளிடத் திருந்ததுபோ லென்னிடத் திருப்பீரானல்
கொள்ளிவைக்கப் பிள்ளையுண்டு குடமுடைக்க மைந்தனுண்டு
ஆழியிடுங் கையாலே அரிசியிட மைந்தனுண்டாம்
உற்றுரிமை செய்வதற்குப் புத்திரனு மீன்றெடுப்பீர்
சேம்புக் கிரைத்தீரே செவ்வாழை வைத்தீரே
வேம்புக் கிரைத்தீரே விருதாவாய் நின்றீரே
எருக்குக்கு நீர்சொரிந்து எத்தனைப்பூ பூத்தாலும்
மருக்கொழுந்து போல்வருமோ மாதகியாள் நேசமெல்லாம்
என்று மவளழுதாள் ஏந்திழையா ளப்போது

## கண்ணகி இறந்த தன்புருஷனை எழுப்பி வாய்ப்பிறப்பறிதல்.

மாண்டவரைத் தானெழுப்பி வாய்ப்பிறப்பு கேட்கவேண்டும்
செத்தவரைத் தானெழுப்பி சேதி யறியவேண்டும்
சொக்கரை மனதுதனில் தோகையவள் தானினைந்து

ஆளனுட தன்னுயிரை அனுப்பவே வேண்டுமென
அப்போது சொக்கலிங்கம் ஆண்டவனர் தாம்பார்த்து
தங்கச் சிமிழதனில் தனஞ்சயனர் தன்னுயிரும்
தங்கச் சரடுகளும் தங்கத்தி னூசியுமே
பொற்பிரம்பு கோலதுவும் பூநீறு செம்பழமும்
அந்தரத்தில் விட்டெறிந்தார் ஆணழகர் சொக்கலிங்கம்
அது-கண்ணகியாள் தன்னிடத்தில் கடுகெனவே வந்ததப்போ
அப்போது கண்ணகியா ளாரணங்கு தானெடுத்து
மாண்டகற் பாறையின்மேல் மன்னவரைத் தான்சேர்த்து
மணிக்குடலுஞ் சிறுகுடலும் மயிலனையாள் தானெடுத்து
இருக்கும் எதாஸ்தான மேந்திழையாள் வைத்தாளே
மணிக்குடலும் சிறுகுடலும் மாதுஒன் றுகவைத்தாள்
ஈர லிறைச்சிதனை யெதாஸ்தான மாகவைத்தாள்
இரண்டா யிருந்தவரை யொன்றுய்த் திரட்டிவைத்தாள்
தங்கநல்ல ஊசியிலே தகுந்தவொரு நூல்கோர்த்து
உச்சியிலே தானிருந்து ஒட்டிவிட்டாள் பொற்சரடு
சரடேறச் சரடேறச் சதையேறி வருகுதங்கே
கால்வழியால் வரும்போது கடுகெனவே பொற்சரடு
இரண்டு விரற்கடைதான் மீந்தது பொற்சரடு
பெருவிரற்குச் சரடுவிட்டாள் பெண்ணரசி கண்ணகியும்
தங்கச் சிமிளதனைத் தையலரும் தான்திறந்தாள்
அவருடைய பஞ்சவுயிர் பொந்தியி லடைந்ததுவே
வெண்ணீறு தான்தூவி மெல்லி யிளங்கொடியாள்
பொற்பிரப்பங் கோலாலே பொற்கொடியாள் தட்டினளே

## இறந்த கோவிலர் பிழைத்துத் தன் பெண்சாதியுடன் வருத்தங்கூறல்.

தூங்கி விழித்தவர்போல் திடுக்கிட்டுத் தானெழுந்தார்
வேங்கை மரமருகில் மெல்லியவள் போயொளித்தாள்
அப்போது கோவிலரும் அலண்டு யெழுந்திருந்து
மாதகியோ கண்ணகியோ வந்தவர்கள் படுகளத்தில்

மாதகியாள் வந்தாலே வாடியென் மடிமேலே
கண்ணகியாள் வந்தாலே கடக்கப்போய் நில்லுமென்றார்
இந்த விசேஷமதை ஏந்திழையாள் தான்கேட்டு
கூத்தியா ரேன்வருவாள் கொண்டவள் வந்தேனென்றாள்
என்று மவள்சொல்லி எதிரில்வந்து நின்றாளே
ஆனையை நான்கொண்டேன் ஏறினாள் மாதகியும்
ஆனைகொண்டாள் வந்தேனே ஏறினவ ளேன்வருவாள்
தோட்டமும் நான்கொண்டேன் பூமுடித்தாள் மாதகியாள்
தோட்டங்கொண் டாள்வந்தேன் பூமுடித்தா ளேன்வருவாள்
கிண்ணியும் நான்கொண்டேன் கிறியுண்டாள் மாதகியாள்
கிண்ணிகொண்டாள் வந்தேனே கிறியுண்டா ளேன்வருவாள்
பட்டையும் நான்கொண்டேன் பாவித்தாள் மாதகியாள்
பட்டுகொண்டாள் வந்தேனே பாவித்தா ளேன்வருவாள்
மாலையிட்டா ளிங்கேவந்தேன் மாதகியா ளேன்வருவாள்
கொண்டவள்நான் வந்தேனிங்கே கூத்தியா ளேன்வருவாள்
கூத்திவர வில்லையென்று கொடியிடை முன்னேநின்றாள்
மன்மத வடிவழகர் வர்த்தகரு மேதுசொல்வார்
சிலம்புவிற்க வந்திடத்தில் தேன்மொழியே ஏன்வந்தாய்
மணிமாற வந்திடத்தே மாதரசே வாலாமோ
பொருள்தேட வந்திடத்தே பொற்கொடியே வாலாமோ
என்குலத்தார் கண்டாலே என்னை மதியார்கள்
எளனங்கள் தேடிவைத்தா யேந்திழையே யென்தனக்கு
என்ன-அப்போது கண்ணகியும் ஆண்ழகர்க் கேதுசொல்வாள்
சிலம்புகொண்டு வந்தீரே தென்மதுரைப் பட்டணத்தில்
பாறைமேல் படுத்ததென்ன பாவையெற்குச் சொல்லுமென்றாள்
சிலம்பது எங்கேயென்று தேன்மொழியுங் கேட்கையிலே
அப்போது கோவிலரும் அரிவையவட் கேதுசொல்வார்
சிலம்புகொண்டு வந்திடத்தே ஜன்மப்பகை நேர்ந்ததடி
கள்ளனென்று சொல்லிக் கட்டிப் பிடித்தார்கள்
ஐந்துநல்ல சத்தியங்க ளடைவாகச் செய்தேன்காண்
ஐந்தாவது சத்தியத்தில் யானைமேற் கோலம்வந்தேன்

ராஜகன்னி பார்த்தாளென்று நலமாக வெட்டச்சொன்னூர்
காளியம்மன் கோவில்முன்னே கண்டதுண்டஞ் செய்தார்கள்
இவ்வளவு தான்சேதி யென்றுரைத்தார் கோவிலரும்
நல்லாரார் பொல்லாரார் நாயகிக்குச் சொல்லுமென்றாள்
உன்னாலே யாவதென்ன உத்தமியே சொல்லுமென்றார்
என்னாலே யாகுங்கா ணெனக்கறியச் சொல்லுமென்றாள்

## கோவிலர் தனக் காகாதவர்களையெல்லாங் கண்ணகிக்குச் சொல்லுதல்.

மாபாவி யானதொரு வஞ்சிபத்தன் பிள்ளைகள்தாம்
சுந்தர லிங்கமென்றும் சோமலிங்க மென்றிருவர்
இருவரும் பொல்லாதா ரென்னையவர் காட்டிவிட்டார்
அப்போது வஞ்சிபத்தன் ஆணழக னோடிவந்து
ஒப்பாரி கொண்டுமெவ னுறவுகொண் டென்னையழைத்து
அண்ணனுட பிள்ளையென்று அன்பா யென்னையழைத்து
கலத்திலே சாதமிட்டுக் கழுத்தறுக்க எண்ணங்கொண்டான்
செஞ்சிலம்பைப் பறித்துத் திருடனென்று கட்டிவைத்தான்
மூதேவி யவன்தேவி முத்துமாலை யோடிவந்து
மலட்டுலக்கை கொண்டுவந்து மண்டைமேல் தானடித்தாள்
நீதிகெட்ட பாண்டியர்கள் நிற்கதலை வெட்டச்சொன்னூர்
மந்திரிகள் தாம்பார்த்து மன்னவர்க ளேதுசொன்னூர்
ஞாயத்தைக் கேட்டு நலமாக வெட்டவேண்டும்
என்றுமே மந்திரிக ளெடுத்துரைத்தா ரந்நேரம்
அப்போது தீர்ப்புகள்தா மடைவாகச் செய்யச்சொன்னூர்
அப்படிக்குச் செய்தேனடி ஆரணங்கு மங்கையரே
பாம்பொரு சத்தியந்தான் வேங்கையொரு சத்தியந்தான்
நெய்யொரு சத்தியந்தான் மழுவொரு சத்தியந்தான்
ஆனையொரு சத்தியந்தா னன்பாகச் செய்யச்சொன்னூர்
குஞ்சரத்தின் மேலேறிக் கோலம் வரும்பொழுது
அப்போது கோவிலிங்கி அரிவையவள் தான்பார்த்தாள்
மெத்தையேறிப் பார்த்தாளென்று வெட்டவே சொன்னூர்கள்

மழுவரசர் நல்லவர்கள் வாளுமது பொல்லாது
யானையது நல்லதுதான் மாவெட்டி பொல்லாதவன்
வேங்கையது நல்லதுதான் வேங்கைக்காரன் பொல்லாதவன்
பாம்புமது நல்லதுதான் ஜோகியவன் பொல்லாதவன்
நெய்புமெத்த நல்லதுதான் காய்ச்சினவன் பொல்லாதவன்
மழுவுமது நல்லதுதான் கொளுத்தினவன் பொல்லாதவன்
மந்திரிகள் நல்லவர்தாம் மன்னவரும் பொல்லாதவர்
ராஜகன்னி பொல்லாதவள் நாயகியே யென்தனுக்கு
அவளாலே யென்னையவர் அநீதமாய் வெட்டிவிட்டார்
என்றுமிவர் கண்ணகிக்கு எடுத்துரைத்தா ரந்நேரம்
அப்போது கண்ணகியும் அருங்கிளியா ளேதுசொல்வாள்
ஒருவன் பழிக்குநாலை உலகம்பழி வாங்கிடுவேன்
சிறுகுடலும் பெருங்குடலுஞ் சேர்த்துப் பிடுங்கிடுவேன்
மணிக்குடலைத் தான்பிடுங்கி மாலையாய் நான்தரிப்பேன்
இப்படிநான் செய்யாவிட்டா லென்பேரு கண்ணகியோ
என்று-மார்புதட்டி சபதஞ்செய்தாள் வர்த்தகனார் முன்னாலே
அப்போது கண்ணகியும் அருங்கிளியா ளேதுசொல்வாள்
வர்த்தகரைப் பார்த்து மயிலனையா ளென்னசொல்வாள்
என்ன வரம்வேண்டு மென்னைநீ கேளுமென்றாள்
பாண்டியர்கள் தம்குடலைப் பாவையேநீ கொண்டுவந்து
கூடமைத்து என்னோடு கொளுத்திவிட்டால் வெந்துவிடும்
அப்படிநீ செய்யவேண்டும் ஆரணங்கே யென்றுசொன்னார்
நான்-செத்தாலுங் கைலாசஞ் சிவன்பாதஞ் சேரவேண்டும்
என்னோடு மாதகியும் உடன்கட்டை சேர்க்கவேண்டும்
இருவருக் குங்காட்சி ஏந்திழையே கொடுக்கவேண்டும்
அப்படியே தாறேனென்று ஆரணங்கு கைகொடுத்தாள்
மன்னவரே என்தனக்கு மாமரத்தி லேறியிப்போ
கனிபறித்துத் தாருமென்று கட்டழகி கேட்கலுற்றாள்
அப்போது மரமேறி ஆணழகர் கோவிலரும்
சொத்தைக் கனியறுத்துத் தோகையற்குத் தான்போட்டு
நல்ல கனிகளை நலமாகத் தான்பறித்து

மாதகிக்கு வேண்டுமென்று மடியிலே கட்டியபின்
மரத்தைவிட்டு இறங்கினரே மணியரசர் கோவிலரும்
என்தனக்குச் சொத்தைக்கனி இனிதாக நீர்போட்டீர்
நல்லகனி யாருக்கு நாயகரே மடியில்வைத்தீர்
ஆசைதந்த மாதகிக்கு அருங்கிளிக்கு வேண்டுமென்ருர்
நீர்-செத்தும் மறக்கவில்லை தேன்மொழியாள் தன்னைசை

## கண்ணகி மறுபடியுங் கோவிலரைக் கொன்றுவிட்டது.

என்று-வர்த்தகரைக் குந்தவைத்து மயிலனையா ளேதுசொல்வாள்
தலைபார்க்கும் பாவனைபோல் தார்குழலாள் கண்ணகியும்
உச்சிச் சரட்டை உருவிவிட்டா ளப்பொழுது
ஒன்ரு யிருந்தவர்தா மிரண்டாய் விழுந்துவிட்டார்
குலைவெட்டி சாய்ந்ததுபோல் கோவிலர் விழுந்துவிட்டார்
வாழைவெட்டி சாய்ந்ததுபோல் வர்த்தகர் விழுந்துவிட்டார்
அப்போது கண்ணகியா ளாரைநினைக்கலுற்ருள்
கொக்கினத்தைத் தானழைத்துக் கோவிலர்க்குக் காவலென்ருள்
மானினத்தைத் தானழைத்து வர்த்தகர்க்குக் காவலென்ருள்
கண்க ளிரண்டுக்குங் கட்டெறும்பு காவலென்ருள்
செவிக ளிரண்டுக்குஞ் சிற்றெறும்பு காவலென்ருள்
காவலில்லாக் கோவிலர்க்கு காவல்வைத்தாள் கண்ணகியும்

## கண்ணகி மதுரைக்கு வருதல்.

மதுரை தனைத்தேடி வாருளே கண்ணகியாள்
கோவிலர்க்குக் காவல்வைத்து கொம்பனையாள் வாருளங்கே
அறிவுகெட்ட பாண்டியர்க ளரண்மனை யெங்கேயென்று
ஆருயிரம் பாண்டியரை அருங்கிளியாள் தேடிவாருள்
நாலுகோட்டை வாசல்களும் நலமாகச் சாத்திருக்க
தெற்குநல்ல வாசலிலே தேன்மொழியாள் வந்துநின்று
கதவைத்திற வென்றுசொல்லிக் கன்னியவள் சத்தமிட
ஆரென்று கேட்டார்கள் அங்கிருக்கும் சேவகர்கள்

திருடனுட தேவிநான் தேன்மொழியாள் வந்தேனப்பா
ராஜாக்கள் பேட்டிகாண நாயகியாள் வந்தேனப்பா
கதவைத்திற வென்றாளே கண்ணகி யிளங்கொடியாள்
சேவகர்கள் தாம்பார்த்துத் திடுக்கிட்டு மெய்மறந்து
திறந்திருந்த பொற்கதவைத் திட்டென்று மூடிக்கொண்டார்
கண்ணகியுந் தான்பார்த்துக் காந்தாளம் பொங்கியவள்
எட்டி யுதைத்தாளே ஏந்திழையாள் பொற்கதவை
தாண்டி யுதைக்கையிலே தவிடுபொடி யாச்சுதப்போ
பொடியாகப் போச்சுதங்கே பொற்கொடி தன்னுதையால்
அப்போது உள்நுழைந்தா ளரிவையந்தக் கண்ணகியும்
அதிலே யொருவனையும் அருங்கிளியாள் தான்பிடித்து
முன்பின்னாய் திருப்பிவிட்டு மூதேவி கேளுமென்று
திருடனுட தேவிநான் தேன்மொழியாள் வந்தேனென்று
என்னைவந்து காணச்சொல்லு இரண்டுங்கெட்ட ராசர்களை
என்ன-அப்போது தூதனவன் அருகிருந்து ஓடிவந்து
பாண்டியர் பதம்பணிந்து பத்தினியாள் சேதிசொல்ல
இப்படிக்குச் செய்தவரார் எமக்கறியச் சொல்லுமென்றார்
அப்போது சேவகனு மரசர்களுக் கேதுசொல்வான்
திருடனுட தேவி தேன்மொழியாள் செய்தாளென்றான்
என்றுசொல்லித் தூதனவ னெடுத்துரைத்தா னந்நேரம்
திருடனுட தேவி தேன்மொழியாள் மங்கையவள்
வந்துகாணச் சொன்னாளே மன்னவரே யுங்களைத்தான்

## கண்ணகி பாண்டியர்களைக் கண்டு பேசுதல்.

அப்போது பாண்டியர்க ளருங்கிளியாள் முன்னேவந்தார்
பாண்டியருள் தலைவனிடம் பாவையவள் ஏதுசொல்வாள்
பழிகொடடா பழிகொடடா பர்த்தாவைக் கொன்றபழி
ஆளனைக் கொன்றபழி அரிவையர்க்கு நீகொடடா
ஏதுக்கடா வெட்டிவைத்தாய் ஏதுங்கெட்ட பாண்டியனே
அள்ளினாரோ திருடினாரோ அணிமதுரைப் பட்டணத்தில்
அள்ளின கோவிலர்க்கு அணிவிலங்கு போடொணாதோ
திருடினாரோ அள்ளினாரோ தென்மதுரைப் பட்டணத்தில்

திருடினதோர் கோவிலர்க்குச் சேர்விலங்கு போடொணுதோ
சேர்விலங்கு நீபோட்டுத் தெரிவித்தா லென்தனக்கு
சேதிகண்ட நாழிகைக்குத் தேன்மொழிநான் வந்திடுவேன்
திருடின திருட்டையெல்லாந் திட்டமுடன் நான்தருவேன்
அள்ளின திருட்டையெல்லாந் அப்போதே நான்தருவேன்
இப்படி வெட்டலாமோ ஏதுங்கெட்ட பாண்டியரே
கோட்டையேறிக் குதித்தாரோ கொலைகளவு செய்தாரோ
அகழேறிக் குதித்தாரோ ஆட்டைமாட்டைச் சாய்த்தாரோ
சுவரேறிக் குதித்தாரோ தொந்தரவு செய்தாரோ
வழிபோவார் வருவாரை மறித்து அடித்தாரோ
அவர்-ஈனுத வாழை இளவாழைத் தண்டலவோ
குலைதள்ளா வாழையவர் கோவிலரைக் கொன்றுயடா
என்னகுற்றஞ் செய்தாரென் றிருதுண்ட மாக்கிவைத்தாய்
சாக வயதலவே தனஞ்சயனுர் கோவிலரும்
மாள வயதலவே மன்னரந்தக் கோவிலரும்
காய்க்கும் பிராயமவர் கன்னிகட்டு நற்காலம்
அழகுள்ள கோவிலரை அநீதமாய் வெட்டிவைத்தாய்
ஆர்பழி வீண்போனுலும் ஆளன்பழி வீண்போமோ
எவர்பழி வீண்போனுலு மென்தன்பழி வீண்போமோ
பழிக்குப் பழிகொடடா பாதச் சிலம்புதாடா
என்றந்தக் கண்ணகியா ளேந்திழையுங் கேட்கலுற்ருள்

## கண்ணகிக்குப் பாண்டியர்கள் மறுமொழி கூறல்.

அப்போது பாண்டியர்கள் ஆணழக ரேதுசொல்வார்
காற்சிலம்பு கொண்டுபோன கள்ளனை வெட்டிவைத்தோம்
செஞ்சிலம்பு கொண்டுபோன திருடனை வெட்டிவைத்தோம்
காற்சிலம்பைத் தானழைத்தால் கள்ளன் பழிதாருேம்
செஞ்சிலம்பை வரவழைத்தால் திருடன்பழி தாருேமென்ருர்

## கண்ணகி சிலம்பை வரவழைத்தல்

அப்போது கண்ணகியும் அருங்கிளியா ளேதுசொல்வாள்
அந்தச் சபையில்நின்று அழைக்கிருள் காற்சிலம்பை

ராஜ சபையில்நின்று நலமா யழைக்கலுற்றாள்
என்னசெப்பி யவளழைத்தா ளேந்திழையாள் காற்சிலம்பை
கூடப் பிறக்கலேயோ கூட்டுப்பா லுண்ணலேயோ
ஒக்கப் பிறக்கலேயோ ஊட்டமுத முண்ணலேயோ
எங்கே யிருந்தாலும் இப்போதே வாருமென்றாள்
வாருமென்று சொல்லியந்த மங்கையருந் தானழைத்தாள்
அப்போது பாண்டியர்கள் அவருடைய பொக்கிஷத்தில்
பெட்டிக்குள்ளே தானிருந்த பொற்சிலம்பு கேட்டதப்பா
பத்துகட்டுந் தானுடைத்துப் பறந்ததே பொற்சிலம்பு
அங்கிருந்த காவலர்கள் ஆயிரம்பேர் தலையுடைத்து
ஆவென்ற சத்தத்துடன் அண்டரண்டந் தானதிர
சக்கரம்போ லேசுழன்று தனிமதுரைப் பாண்டியர்முன்
கண்ணகிக்கு முன்னேவந்து காற்சிலம்பு நின்றதங்கே
பத்தினியாள் தான்பார்த்துப் பாவையவள் ஏதுசொல்வாள்
அடி-கிட்ட வரவேண்டா மெட்டநில்லு செஞ்சிலம்பே
அண்டை வரவேண்டாம் அப்புறத்தே ஒதுங்கிநில்லு
என்-தாலி பறிக்கவந்த தனிச்சிலம்பே ஒதுங்கிநில்லு
மாலே பறிக்கவந்த மாபாவி ஒதுங்கிநில்லு
கூறை பறிக்கவந்த கொடும்பாவி ஒதுங்கிநில்லு
வேசியுன்னைப் பார்த்தாளோ விலேமாது கொண்டாளோ
தாசியுன்னைப் பார்த்தாளோ தகாதவள் தொட்டாளோ
மஞ்சள் பறிக்கவந்த மாபாவி ஒதுங்கிநில்லு
என்றுசொல்லி கண்ணகியும் ஏதுரைப்பாள் பாண்டியர்க்கு
பொற்சிலம்பு வந்ததுவே புத்திகெட்ட பாண்டியரே
காற்சிலம்பு வந்ததுவே கண்ணகியாள் பழிகொடென்றாள்

## பாண்டியர்கள் கண்ணகியைத் தங்கள் சிலம்பு கேட்குதல்.

அப்போது பாண்டியர்க ளாணழக ரேதுசொல்வார்
உன்சிலம்பு வந்ததிங்கே உத்தமியே பத்தினியே
என்சிலம்பை வரவழைத்தா லுன்பழியைத் தாரேனென்றார்

## பாண்டியர்கள் சிலம்பைக் கண்ணகி வரவழைத்தல்.

அப்போது கண்ணகியா ளரிவைபவ ளேதுசொல்வாள்
வட்டமிடு கருடனைத்தான் வாவென்று தானழைத்தாள்
அப்போது கருடனுந்தான் அரிவைமுன்னே வந்ததங்கே
உன்பழியை வாங்கித்தாறே னென்சிலம் பெடுத்துவாரும்
மைந்தன்பழி வாங்கித்தாறேன் மணிச்சிலம் பெடுத்துவாரும்
பிள்ளைபழி வாங்கித்தாறேன் பொற்சிலம் பெடுத்துவாரும்
என்ன-அப்போது கருடனது அந்தரமாய்த் தான்பறந்து
ஏழு கடலுக்கப்பா லேகிதிருப் பாற்கடலில்
கன்னிபுற்றைத் தான்தேடிக் கருடனு மங்கேவந்து
நான்வைத்த பொற்சிலம்பை நலமாகத் தாருமென்ன
ஐந்துதலை நாகமது அன்பாகக் கருடன்கையில்
அப்போது கருடன்கையில் அழகாய்க் கொடுத்ததங்கே
அப்போது கருடனுமே அவசரமா யோடிவந்து
பாண்டியர்கள் தம்கொலுவில் பக்குவமாய் வந்துநின்று
செஞ்சிலம் பெடுத்துவந்து சேயிழையாள் கைகொடுக்க
அந்தச்சிலம்பு வந்ததிங்கே யென்பழியை நீகொடடா
பழிக்குப் பழிகொடடா பாண்டியனே யென்தனக்கு
அறிவுகெட்ட பாண்டியனே ஆளன்பழி நீகொடடா
புத்திகெட்ட பாண்டியனே புருஷன்பழி நீகொடடா
விபரங்கெட்ட பாண்டியனே வேந்தன்பழி நீகொடடா
என்-கணவன் பழிகொடடா கனிவுகெட்ட பாண்டியனே
புருஷனை ஏண்டாகொன்றாய்ப் புத்திகெட்ட பாண்டியனே
ஆளனை ஏண்டாகொன்றாய் அறிவுகெட்ட பாண்டியனே
எவர்பழிவீண் போனாலு மென்பழிவீண் போகாது
கணவனைக் கொன்றபழி கன்னியெற்குத் தாடாவென்றாள்
என்றவள் கேட்டாளே ஏந்திழையாள் கண்ணகியும்
அப்போது பாண்டியர்கள் ஆலோசனை யேதுசெய்தார்
இரண்டு சிலம்புகளை யின்பமாய்த் தான்கொடுத்து
சேவக ரிடங்கொடுத்துச் செப்புவா ரோர்வசனம்
கோவிலிங்கி தன்னிடத்திற் கொண்டுபோய் நீங்களுமே

செஞ்சிலம்பின் தன்செயலைத் தெளிந்தறிந்து வாங்களென்றார்
சிலம்பை யவரெடுத்துத் தீவிரமா யோடிவந்து
ராஜகன்னி முன்னே நலமாகக் கொண்டுவந்தார்
கொண்டுவந்த செஞ்சிலம்பை கோவிலிங்கி கைகொடுத்தார்
அப்போது ராஜகன்னி ஆரணங்கு மேதுசொல்வாள்
நாகரத்னச் சிலம்பு நம்மதல்ல வென்றுரைத்தாள்
தன்சிலம்பைத் தானெடுத்துத் தன்காலி லேபூட்டி
என்சிலம் பல்லவென்று எறிந்துவிட்டா ளப்போது
நாகரத்னச் சிலம்பை ராஜகன்னி தானெடுத்து
என்சிலம் பல்லவென்று எறிந்துவிட்டா ளப்போது
அந்தச் சிலம்பெடுத்து ஆணழகர் வாருரே
ராஜாக்கள் முன்னேவந்து நலமாக ஏதுசொல்வார்
கோவிலிங்கி தன்மொழியைக் கொற்றவர்கள் தாமுரைத்தார்
நாகரத்னச் சிலம்பு நம்மதல்ல வென்றுரைத்தார்
ஆருயிரம் பாண்டியர்கள் அப்போ விழித்தார்கள்
கண்ணகியுந் தலைமாறன் தன்னிடத்தே ஏதுசொல்வாள்
உன்சிலம்பும் என்சிலம்பும் உன்சபையில் வந்ததோடா
என்பழியை நீகொடடா ஏதுங்கெட்ட பாண்டியனே
என்ன-அப்போது பாண்டியர்கள் ஆரணங்குக் கேதுசொல்வார்
சிட்டுபோல் கத்துகிருள் தேன்மொழியைத் தள்ளுமென்ருர்
சிட்டென்ருல் வீண்போமோ தண்ணீர்பழி வாங்கலையோ
கீரியைப்போல் கத்துகிருள் கிளிமொழியைத் தள்ளுமென்ருர்
கீரியென்ருல் வீண்போமோ அதுவும்பழி வாங்கலையோ
நாயைப்போல் கத்துகிருள் நங்கைதனைத் தள்ளுமென்ருர்
நாயென்ருல் வீண்போமோ நாலுபழி வாங்கலையோ
எவர்பழிவீண் போனுலும் என்தன்பழி வீண்போமோ
ஆளன் பழிகொடடா அறிவுகெட்ட பாண்டியனே
பர்த்தா பழிகொடடா பாரங்கெட்ட பாண்டியனே
என்று மவள்கேட்க ஏதுசொல்வார் பாண்டியர்கள்
மாதரைப்போல் கூவுகிருள் மங்கைதனைத் தள்ளுமென்ருர்
பெற்றமகள் மாதரென்ருல் பூமியிடங் கொள்ளுமோடா

வளர்த்தமகள் மாதரென்றால் வையகங்கள் கொள்ளுமோடா
பத்துக்கு அர்த்தஞ்சொன்னால் பர்த்தாபழி தாரேனென்றார்
அப்படியே அர்த்தஞ்சொல்லி அரிவையந்தக் கண்ணகியாள்
என்-புருஷன் பழிகொடடா புத்திகெட்ட பாண்டியனே
என்ன-அப்போது பாண்டியர்கள் அரிவையவட் கேதுசொல்வார்
அறியாமற் கொன்றுவிட்டோ மரிவையே என்செய்வோம்
தெரியாமற் கொன்றுவிட்டோம் தேவியே ஏதுசெய்வோம்
என்ன-அப்போது கண்ணகியாள் ஆரணங் கேதுசொல்வாள்
முற்பழி பிற்பழிதா னிப்பழி தாருமென்றாள்
இப்படிக்குச் சொன்னாலே ஏந்திழைநான் விட்டிடுவேன்
என்ன-அப்படியே சொல்லுகிறோம் ஆரணங்கே விட்டுவிடு

## கண்ணகி பாண்டியர்களைக் கொன்றுவிடுதல்.

கோட்டை வெளிதனிலே கொற்றவர்கள் வாருமென்றாள்
அப்படியே நல்லதென்று அனைவோரும் வந்தார்கள்
ஆறுயிரம் பாண்டியர்கள் ஆணழகர் வந்துநின்றார்
தாழ்வுவந்து நேர்ந்திருக்கத் தலையிற் கிரீடமென்ன
அபகீர்த்தி வந்திருக்க புஜகீர்த்தி தானுமென்ன
தலையில் கிரீடத்தை தாழவையு மென்றுரைத்தாள்
புஜகீர்த்தி தான்கழற்றிப் பூமிதனில் வையுமென்றாள்
பூணூல் கழற்றிவையும் புத்திகெட்ட பாண்டியரே
கணையாழி மோதிரத்தைக் கழற்றிவையு மென்றுரைத்தாள்
என்ன-அத்தனையுந் தான்கழற்றி ஆணழகர் தாழவைத்தார்
மந்தைவெளி மாடதுபோல் மன்னர்களை நிற்கவைத்தார்
முற்பழி பிற்பழிதான் இப்பழி மூன்றுபழி
சொல்லிவாய் மூடுமுன்னே தோகை யிளங்கொடியும்
வாவென்று தானழைத்தாள் வருகிறது மறுரூபம்
காளியென்ற ரூபமதைக் கண்ணகியுந் தானெடுத்தாள்
சிங்கப்பல்லுஞ் செஞ்சடையுஞ் சிவனுடைய ரூபமுந்தான்
கோடாலிப் பல்லழகுங் கோழிமுட்டைக் கண்ணழகும்
இரண்டு கரந்தனிலே எடுத்தாள் திரிசூலம்

சூல மொருகையில் சுக்குமாந் தடியொருகை
பாச மொருகையில் பன்னிருவேல் தானொருகை
மாடறுக்குஞ் சூரி மடியில்ரண்டு பாங்குடனே
ஆறுயிரம் பாண்டியரை அன்பாகத் தானிறுத்தி
சூலத்தைக் கொண்டுமவள் குத்தினாள் பாண்டியரை
சிறுகுடலும் பெருங்குடலுஞ் சேர்த்துப் பிடுங்கினாளே
தோள்தனில் மாலைகொண்டாள் தோகை யிளங்கொடியாள்
பாண்டியரைக் கொன்றுவிட்டுப் பாவையவ ளெங்கேவாறாள்

## கண்ணகி தனக்காகாதவர்களையெல்லாங் கொல்லுதல்.

வஞ்சிபத்தன் வீடுதேடி வாறாள் மயிலனையாள்
முத்துமாலை தன்னையப்போ மூடிவைத்தார் பழங்கலத்தால்
பரணைமே லொளித்திருந்தான் பாதகன் வஞ்சிபத்தன்
ஆரடா வென்றுசொல்லி அதட்டினாள் கண்ணகியாள்
அதட்டின சத்தத்தில் அக்கலங்கள் தானுடைந்து
பழங்கலங்கள் தானுடைந்து பாவை யிளங்கொடியாள்
அப்போது முத்துமாலை ஆரணங்கு வெளிப்பட்டாள்
எட்டிச் சிகைபிடித்து இரண்டு உதையுதைத்து
பரணையி லிருந்தவனைப் பற்றியே தானிழுத்து
குத்திச் சரித்துமவன் குடலைப் பிடுங்கிக்கொண்டாள்
தோள்மாலை தானணிந்தாள் தோகை மயிலனையாள்
ஐந்துமாதங் கர்ப்பமாம் அரிவைபந்த முத்துமாலை
அவள்-வயிற்றிற் கருவதனை வாய்தனிலே கவ்விக்கொண்டு
கோவிலிங்கி யரண்மனைக்குக் கொம்பனையாள் வாறாளே
வஞ்சிபத்தன் பிள்ளைகளும் வாறா ரிருவருந்தான்
அப்போது கருடனவன் இருவர்களைத் தான்பார்தது
மைந்தனைக் கொன்றவர்கள் வாறார்க ளிருவருமாய்
என்-பிள்ளையைக் கொன்றபழி வாங்கிவிட வேண்டுமென
சொன்ன வுடனேயந்தத் தோகை மயிலனையும்
வாவென்று சொல்லியே மன்னர்களைத் தானழைத்து
எழுத்தாணி கொண்டு ஏந்திழையாள் குத்தியவள்

சிறுகுடலும் பெருங்குடலுஞ் சேர்த்துமே தான்பிடுங்கி
ஆகாச மாகவேதான் அந்தரத்தில் விட்டெறிந்தாள்
காலாலே கவ்விக்கொண்டு கடுகெனவே போச்சுதுகாண்
கோவிலிங்கி யரண்மனைக்குக் கொம்பனையாள் வாருளே
பகடையாடிக் கொண்டிருந்தாள் பாவையந்தக் கோவிலிங்கி
எட்டிச் சிகைபிடித்து இழுத்துவந்தாள் வாசலிலே
தாயென்றும் பாராமலே தள்ளியவள் குத்தினளே
சிறுகுடலும் பெருங்குடலுஞ் சேர்த்துப் பிடிங்கிக்கொண்டு
வேதவாத்தி பள்ளிக்கூடம் மெல்லியவள் வந்துநின்று
மதுரைவிட்டு அப்பாலே மன்னனே விலகுமென்ருள்
சிந்தாமணித் தாசிதன்னைச் சீக்கிரம் போய்விடென்ருள்
பன்னிரண் டமைச்சர்களைப் பத்தினியாள் போங்களென்ருள்
அங்கிருந்து கண்ணகையாள் ஆரணங்கு எங்கேவாருள்
நாலு மதுரையது நடுமதுரை வந்துநின்ருள்

## கண்ணகி மதுரையைக் கொளுத்துதல்.

தன்சிலம்பைத் தானெடுத்துத் தனிமதுரை விட்டெறிந்தாள்
அதுபட்ட இடங்களெல்லாம் அக்கினியாய் பற்றுதங்கே
தாயார் சிலம்பெடுத்துத் தனிமதுரை விட்டெறிந்தாள்
அரும்புபட்ட இடங்களெல்லாம் அக்கினியாய்ப் பற்றுதங்கே
குண்டுபட்ட இடங்களெல்லாம் குபுகுபென்று பற்றுதுபார்
தென்மதுரை வடமதுரை தேன்மொழியாள் தான்பார்த்து
வலது மார்திருகி வடமதுரை விட்டெறிந்தாள்
இடது மார்திருகி எழில்மதுரை விட்டெறிந்தாள்
பால்பட்ட விடங்களெல்லாம் பற்றி யெரியுதுபார்
நாலு மதுரையெல்லாம் நன்று யெரியுதுபார்
நடுமத்தி நின்றுகொண்டு நாரியுக்ர மாயிருந்தாள்
கறுத்தபுகை சிவந்தபுகை கண்டுவிட்டாள் கண்ணகியும்
இப்படி யாக இருக்குமந்த வேளையிலே
வெண்ணெய்க் குடமெடுத்து வாருள் தயிரிடைச்சி
அங்கே வரவொட்டாமல் அக்கினியாய்ப் பற்றுதங்கே

பத்தினியைத் தானிணைக்கப் பற்றுகின்ற தீதணியும்
வெண்ணெய் எடுத்து விட்டெறிந்தாள் மார்மேலே
வெண்ணெய் உருகிறதை மெல்லியவள் தான்பார்த்து
தன்-முன்தானை தான்கிழித்து மார்பில் வரிந்துகட்டி
முறத்தால் விசிறினாளே மெல்லியந்த சீர்பறைச்சி
தேகங் குளிர்ந்தவுடன் திரும்பியே தான்பார்த்தாள்
இடைச்சி பறைச்சியர்க்கு என்ன வரங்கொடுப்பாள்
எந்தத்தெரு வெந்தாலும் இடைச்சிதெரு வேகாது
பார்மதுரை வெந்தாலும் பறத்தெருவு வேகாது
என்று-வாழ்த்தி வரங்கொடுத்து மாதர்களைப் போங்களென்று
படுகளத்தைத் தான்தேடி பத்தினியாள் வாறாளங்கே

## கண்ணகியம்மன் மாதகிக்கு ஓலையெழுதி யனுப்புதல்.

ஓலை யெழுதுகிறாள் உறவுள்ள மாதகிக்கு
என்-சக்களத்தி மாதகியே சங்கதியும் நீகேளு
உன்கடனுக் காகவேதான் உத்தமனார் கோவிலனார்
செஞ்சிலம்பு விற்கவந்த செட்டியார் தாம்மடிந்தார்
மாண்டு மடிந்துவிட்டார் வடிவழகர் கோவிலரும்
என்று-இப்படிக்குச் சொல்லி எழுதினா ளோலைதனை
காகத்தைத் தானழைத்துக் காலிலதைக் கட்டிவிட்டாள்
ஓலைச் சுருளெடுத்து ஓடிவந்து காகமது
மாதகிக்கு முன்னேவந்து மடக்கோலை போட்டதங்கே
ஓலைச் சுருள்பார்த்தாள் ஒளிவுள்ள மாதகியும்
ஓலையின் மர்மமெல்லாம் ஒக்கவே தான்பார்த்து
துக்கம் பெருகியவள் துரிதமா யுள்நுழைந்து
செட்டியார் தான்கொடுத்த திரவியங்க ளத்தனையும்
நலமுடனே மாதகியும் நாலுபங்கு தான்பகுந்தாள்
கோவிலுக் கோர்பங்கு குருக்கள்தமக் கோர்பங்கு
தாயாருக் கோர்பங்கு தர்மத்துக்கோர் பங்குவைத்து
கோடாலி முடிபோட்டு மஞ்சள் துகிலுடுத்தி
தாம்பூல மும்பழமுந் தன்மடியில் கட்டிக்கொண்டு

அழுதுகொண்டு வாருளே அணிமதுரை வீதியிலே
கணவன் படுகளத்தில் கதறிக்கொண்டு வாருளே
மாதகியாள் வரவுகண்டு மயிலனையாள் போயொளித்தாள்
ஆளனைக் கண்டுவிட்டாள் ஆரணங்கு மாதகியாள்
அழுது புலம்பலுற்ருள் அந்தநல்ல மாதகியாள்

## மாதகி கோவிலரைக்கண்டு புலம்பல்.

வந்தாள் படுகளத்தில் விழுந்தாள் புரண்டழுதாள்
ஐயோ சிவனேயென் றலறிப் புரண்டழுதாள்
மடிந்தீரோ மன்னுவென்று மாரடித்துக் கொண்டழுதாள்
செத்தீரோ மன்னுவென்று சேர்த்துமுத்த மிட்டழுதாள்
வெற்றிலை போட்டதொரு வெள்வாயை முத்தமிட்டாள்
தக்கோலந் தின்றதொரு தனிவாயை முத்தமிட்டாள்
முத்தங் கொடுத்துமவள் மோதி யழுவாளாம்
பக்கத்தில் நின்றுமவள் பறந்துமா ரடிப்பாளாம்
கூத்தியார் வந்தேன்காண் கொண்டவ ளேன்வருவாள்
வேசிநான் வந்தேன்காண் மெல்லியவ ளேன்வருவாள்
தாசிநான் வந்தேன்காண் தையலவ ளேன்வருவாள்
என்றுசொல்லி மாதகிதா னெழுந்தழவே யப்போது
நான்கூட வந்தேனென்று நாயகியா ளோடிவந்து
எதிரில்நின்று மாரடித்தா ளேந்திழையாள் கண்ணகியும்
இருவருமாய் மாரடித்தார் இறந்ததொரு கோவிலர்க்கு
மாதுகண் ணகிபார்த்து மாதகிக் கேதுசொல்வாள்
செட்டியார் தன்னுடனே தேவிநான் மாளுகிறேன்
எங்க ளிருவரையும் எடுத்துத் தகனஞ்செய்யும்
என்ன-அப்போது மாதகியாள் ஆரணங் கேதுசொல்வாள்
பலன்கண்ட மாதகியாள் பத்தினியு மேதுசொல்வாள்
பலன்கண்டாள் நானிருக்கப் பத்தினியாள் மாளுவானேன்
சுகங்கண்டாள் நானிருக்கத் தோகைநீ மாளுவானேன்
நீ-என்ன சுகமறிவா யென்றன் தமக்கையரே
நான்கூட மாளுகிறேன் நாயகனர் தம்முடனே

எங்க ளிருவரையும் எடுத்துத் தகனஞ்செய்யும்
உனக்குச்-சம்மதியா வென்றுரைத்தாள் தையலந்த மாதகியும்
அப்படியே சம்மதித்தாள் ஆரணங்கு கண்ணகியாள்

## கண்ணகி கோவிலரையும் மாதகியையும் தகனஞ்செய்தல்.

வாழை மரத்தைவெட்டி மகாகாஷ்டந் தானடுக்கி
கோவிலரைத் தானெடுத்துக் கொம்பனைமா ரிருவர்களும்
கழுவிக் குளிப்பாட்டிக் கால்கட்டு கட்ட லுற்றார்
காஷ்டத்தின் மேலேவைத்தார் கட்டழகர் கோவிலரை
மாதகியா ளப்பொழுது மன்னருடன் தான்படுத்தாள்
இவள்கைமே லவர்சிரசும் அவர்கைமே லிவள்சிரசும்
கட்டி யணைத்துக்கொண்டு கட்டழகி தான்படுத்தாள்
கொள்ளிவை யென்றுசொன்னாள் கோலவிழி கண்ணகியும்
கொள்ளிக்கட்டை தானெடுத்துக் குடமொன்று கைபிடித்து
கொள்ளிக்குப் பிள்ளையானேன் குடமுடைக்க மைந்தனானேன்
என்றுசொல்லி கண்ணகியா ளெடுத்தாளே வாய்க்கரிசி
ஆழியிடுங் கையாலே அள்ளியிட்டாள் வாய்க்கரிசி
கொள்ளியிடப் பிள்ளையில்லை குடமுடைக்க மைந்தனில்லை
என்றந்தக் கண்ணகியு மெடுத்தாளே பச்சைவாழை
ஈனாத வாழை இளவாழைத் தண்டெடுத்து
அட்டாளுஞ் சொர்க்கர்தம்மை ஆண்டவரை மனதிலெண்ணி
இதுதான்காண் கொள்ளியென இருவருக்குந் தான்சொருகி
கண்ணகியு மெய்யானால் கலந்துபற்றி வேகவென்றாள்
என்று-பத்தினியாள் சொல்லையிலே பற்றி யெரியுதுபார்
கலந்துபற்றி வேகையிலே கண்ணகியா ளேதுசெய்வாள்
மாதகி யென்றுசொல்லி மயிலனையாள் தானழைத்தாள்
ஏனம்மா வென்றுசொல்லி யெடுத்துரைத்தாள் மாதகியும்
மூன்று தரமழைத்தாள் மூன்று குரல்கொடுத்தாள்
சந்தோஷப் பட்டாளே தையலந்தக் கண்ணகியும்
காஷ்டந் தணிந்தபின்பு கண்டாளே கண்ணகியும்
சுட்டதொரு அஸ்திகட்குச் சோறிட்டு நீர்தெளிந்து

## கண்ணகி இருவருடைய அஸ்திகளைக் காசி கங்கையில் விடுதல்.

இருவருட அஸ்திகளை ஏந்திழையா ளெடுக்கையிலே
மாதகியாள் மடிதனிலே வைத்திருந்த புஷ்பமுதல்
வைத்தபடி யாயிருக்கக் கண்டாளே கண்ணகியும்
பத்தினியா ளென்றுசொல்லிப் பாவை மனதிலெண்ணி
இருவருட அஸ்திகளை ஏந்திழையாள் தானெடுத்து
காசி நதிதேடிக் கண்ணகியாள் வாருளே
அப்போது சொக்கலிங்கம் ஆண்டவன ரேதுசெய்தார்
அவ்விடத்தி லாலயங்கள் அனேகமா யுண்டுபண்ணூர்
அங்கேயொரு வேதியர்போல் ஆண்டவனூர் வீற்றிருந்தார்
வேதியரைத் தான்பார்த்து மெல்லியவ ளேதுசொல்வாள்
காசிநதி யெங்கேயென்று கண்ணகியாள் கேட்கலுற்றாள்
இதுதான் காசிநதி யென்றுரைத்தார் வேதியரும்
கோவிலனுர் அஸ்தியெல்லாம் மல்லிகைப் புஷ்பமாச்சு
மாதகியா ளஸ்தியெல்லாம் பூத்தொடுக்க நாராச்சு
நாருநல்ல பூவதுவும் ஜலத்தில் மிதக்குதுபார்
என்ன-கண்ணகியா ளப்பொழுது கண்டு மனமகிழ்ந்து
பத்தினியா ளென்றுசொல்லிப் பாவை மனதிலெண்ணி
அப்போது கண்ணகியாள் ஆரணங்கு எங்கேவாருள்
வேம்பூரு எல்லைதாண்டி விரைவாக வாருளே
மலையாளத் தெல்லையிலே மயிலனையாள் வந்திருந்து
பகவதியா ளென்றுசொல்லிப் பட்சமுடன் பேருபெற்று
அங்கே சிலகாலம் அரிவையவள் தானிருந்தாள்
இருக்கப் பொருந்தாமல் இயலான கண்ணகியும்

## கண்ணகியம்மன் திருவொற்றியூர்க்கு வருதல்.

கடலோரம் நல்வழியாய்க் கண்ணகியும் வாருளே
ஒற்றி நகர்தேடி யுத்தமியாள் வந்துநின்ருள்
திருவொற்றி யூர்தனிலே தியாகரும் அம்மனுமாய்
சொக்கட்டா னடிருந்தார் சுந்தரர்க்குத் தூதுவந்தோர்

பகடைக ளாடிருந்தார் பாவையர்க்குத் தூதுவந்தோர்
சதுரங்க மாடிருந்தார் சங்கிலிக்குத் தூதுவந்தோர்
அந்தச் சமயத்திலே கண்ணகியா ளங்குவந்தாள்
கண்ணகியைக் கண்டவுடன் கடுகவத் தியாகர்தேவி
அந்தப் புரந்தனிலே அம்மாளவள் போயொளித்தாள்
தேடியச் சமயத்திலே தியாகரண்டை வந்துநிற்க
கையிலே தானிருந்த பகடைகளை விட்டெறிந்து
எங்கேவந்தீ ரென்றுசொல்லி ஏந்திழையைக் கேட்கலுற்ருர்
தாகமுண்ணத் தாருமென்ருள் தயவுடனே கண்ணகியும்
அப்போது தியாகரவர் ஆண்டவனு ரேதுசொல்வார்
ஆழச் சுனையிறங்கி அள்ளிப் புசியுமென்று
பாசியதைத் தள்ளியே பாவைஜல முண்ணுமென்ருர்
அப்படியே நல்லதென்று ஆரணங்கு தானிறங்க
இறங்கின சாடைகண்டு ஏதுசெய்தார் தியாகரவர்
பாறையைக் கொண்டுமவர் கடுகெனவே மூடிவிட்டார்
கண்ணகியுந் தான்பார்த்துக் கனமோசம் வந்ததென்று
நம்புரிமார் வீதியிலே நலமா யெழுந்திருந்தாள்
அதுவறிந்து தியாகரவர் அங்கொருகல் மூடிவிட்டார்
பூந்தோட்ட முன்பாகப் பூவையவள் தானெழுந்தாள்
அதுவறிந்து சுவாமியவர் அங்கொருகல் மூடிவிட்டார்
காசிகுளம் மேட்டருகே கண்ணகியாள் தானெழுந்தாள்
அதுவறிந்து ஆண்டவனுர் அங்கொருகல் மூடிவிட்டார்
கண்ணகியாள் பார்த்துக் கன்றிக் கலக்கமுற்ருள்
தேவிகலக் கந்தெரிந்து தியாகரவர் ஏதுசொல்வார்
இன்று முதற்கொண்டு இங்கே யிருந்துவிடு
சித்திரை மாதத்திலே சிறப்பான நாளையிலே
முதற்பூசை யுன்தனக்கு மேலாகத் தாருமென்ருர்
இன்னமும் வேண்டியதை எனக்கறியச் சொல்லுமென்ருர்
கண்மூன் றுடையவர்க்குக் கண்ணகியா ளேதுசொல்வாள்
எட்டிகுட்டி எட்டுபொட்டை எட்டுமுட்டை எட்டுசெட்டி
கம்மாளர் பலியெனக்குக் கடவுளே தரவேண்டும்

வருஷத்துக் கோர்பலிதான் வகையாய்க் கொடுக்கவேண்டும்
என்ன-அப்போது தியாகரவர் அப்படியே தாறேமென்றார்
வட்டபுரி யம்மனென்று வகையாகப் பேருபெற்று
ஆண்டுக் கொருதரந்தான் அழகுள்ள கம்மாளனைப்
பலிவாங்கிக் கொண்டிருந்தாள் பூவையந்தக் கண்ணகியும்
அப்போ தொருவருடம் ஆனதொரு கம்மாளன்
பத்துப் பதிகமது பாவையர்க்கு முன்படித்தான்
கங்கையாய்ப் பாலதுதான் கண்ணகிக்குத் தான்சுரக்க
வட்டபுரி யம்மனவள் மனமகிழ்ந் தேதுசொல்வாள்
இன்றுமுத லென்தனக்கு இந்தப்பலி வேண்டாமென்று
எருமைக்கடா காவுதந்தால் இன்பமாய் நான்கொள்வேன்
என்ன-அப்படியே சம்மதித்தார் ஆதிபுரி ஈஸ்வரனார்
கனவில்வந்து தானுரைத்தார் கலியுகத்து மானிடர்க்கு
ஆண்டவனார் சொற்படியே அன்புள்ள காவலர்கள்
பூசை தவறாமல் புண்ணியர்கள் செய்திடுவார்
செவ்வாய் புதன்கிழமை திருவாட்சி மேல்வருவாள்
வந்தவர்க்கு வரந்தருவாள் வட்டபுரி நாச்சியம்மன்
வட்டபுரி யம்மன்கதை வகையுடனே வையகத்தில்
கற்றவர்கள் கேட்டவர்கள் கலியுகத்திற் சொன்னவர்கள்
ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரோடி
மூங்கில்போற் சுற்றம் முசியாமல் வாழ்ந்திருப்பார்
வாழிவாழி யென்றுசொல்லி வரமளித்தா ரீஸ்வரனார்.

கோவலன்கதை முற்றிற்று.